# பிழைக்கும் வழி

## PRACTICAL LIFE

ஜி. ஏ. வைத்தியராமன், பி. ஏ.,
பத்திராதிபர்.

G. A. VaidyaRaman, B. A.,
EDITOR.

புஸ்தகம் 3. Vol. 3. } விரோதிகிருது௵ கார்த்திகைமீ NOVEMBER, 1911. { ஸஞ்சிகை 11. No. 11.


## Practical Life.

A popular illustrated Tamil monthly magazine of general information and instruction devoted largely to agriculture, trade, industry, citizenship and popular, scientific and technical education.

RATES OF SUBSCRIPTION POST FREE.

| | Inland. Rs. A. P. | Foreign Rs. A. P. |
|---|---|---|
| Per annum ... | 4 0 0 | ... 6 0 0 |
| Single copy ... | 0 6 0 | ... 0 8 0 |
| Sample copy ... | 0 2 0 | ... 0 3 0 |

RATES OF ADVERTISEMENT.

| | | |
|---|---|---|
| 1 Page ... | 5 0 0 | per month. |
| ½ do ... | 2 8 0 | do |
| ¼ do ... | 1 4 0 | do |
| Less than ¼ page ... | 0 8 0 | per *inch* per month. |

The above rates are all *net* and subject to no discount whatever. Orders should be accompanied with advance.

**Notice to Contributors.**—The Editor solicits contributions on subjects relating specially to agriculture, trade, industry and popular, scientific and technical education. Articles intended for the journal should be written in plain colloquial Tamil on one side of the paper only and on half margin. All articles which may be accepted will be paid for on publication. It will be understood that the publishers may at their discretion republish in book form articles which have been paid for at the time of publication in the journal.

No money should be paid to any Agent. All remittances and letters should be addressed to the Publishers, Messrs. G. A. Vaidya Raman & Co., 3 & 4, Sunkurama Chetty Street, Georgetown, Madras.

## பிழைக்கும் வழி.

முக்கியமாய் விவஸாயம், வியாபாரம், கைத்தொழில், ப்ரஜா லக்ஷணம், வித்யா விஷயங்கள் அடங்கிய ஸகலருக்கும் உபயோகமான படங்களடங்கிய, ஒரு மாஸாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

தபாற்கூலி உள்பட சந்தா விவரம்.

| | உள் நாடு. | அந்நிய நாடு. |
|---|---|---|
| வருஷம் 1க்கு .. | 4 0 0 .. | 6 0 0 |
| தனிப்பிரதி .. | 0 6 0 .. | 0 8 0 |
| மாதிரி காபி .. | 0 2 0 .. | 0 3 0 |

சந்தாப்பணத்தை ஒரு ஏஜெண்டினிடத்திலும் கொடுக்கக்கூடாது. ஸகல பணத்தையும் எங்களுக்கு நேரில் அனுப்பிவிடவேண்டும்.

விளம்பர விகிதங்கள்.

| | | |
|---|---|---|
| 1 பக்கத்திற்கு | மாஸம் ஒன்றுக்கு | 5 0 0 |
| ½ பக்கத்திற்கு | ,, ,, | 2 8 0 |
| ¼ பக்கத்திற்கு | ,, ,, | 1 4 0 |
| ¼ பக்கத்திற்குக் குறைந்தால் மாஸம் ஒன்றுக்கு அங்குலம் ஒன்றுக்கு | | 0 8 0 |

**வியாஸம் எழுதுகிறவர்கள் கவனிக்கவேண்டியவை.**

விவஸாயம், வியாபாரம், கைத்தொழில் விஷயங்களைப்பற்றி வியாஸங்கள் தேவை. அவைகள் ஒப்புக்கொள்ளப்பட்டால் பிரசுரமானதும், எழுதினவர்களுக்கு தக்க ஸம்பாவனை செய்யப்படும். ஒவ்வொரு வியாஸத்தையும் கடுதாசியின் ஒரேபக்கத்தில் ஒருபாதியை விட்டு மறுபாதியில் மட்டும் எழுதவேண்டும். பேசும் தமிழ்தான் தேவை. கடினமான தமிழ் உதவாது.

இந்தப் பத்திரிகையில் பிரசுரமாகும் வியாஸங்களுக்காக நிருபர்களுக்கு ஸம்பாவனை செய்திருக்கும் பக்ஷத்தில், அந்த வியாஸங்களை நாங்கள் எங்கள் இஷ்டப்படி எந்த விதம் வேணுமானாலும் மறுபடி பிரசுரிக்க அதிகாரமுண்டு என்பதை நிருப நேயர்கள் அறியவேணும்.

ஜி. ஏ. வைத்தியராமன் அண்டு கம்பெனி,
3 & 4, சுங்குராம செட்டித் தெருவு, மதராஸ்

# பிழைக்கும் வழி.
## PRACTICAL LIFE.

புஸ்தகம் 3. Vol. 3. — விரோதிகிருதுஸு கார்த்திகைமீ—NOVEMBER 1911. — ஸஞ்சிகை 11. No. 11.


## பொருளடக்கம்.



## CONTENTS.

## EDITORIAL NOTES.

## பத்திராதிபர் குறிப்புகள்.

### Our New Governor.

நமது புதிய கவர்னர்.—நம்முடைய புதுகவர்னராகிய ஸர் தாமஸ் கிப்ஸன் கார்மைகேல் நாளது மீ ஸம் முதல் தேதியன்று சென்னப் பட்டணத்தில் வந்து இறங்கி மூன்றாந் தேதி 4—30-மணிக்கு தம்முடைய உத்யோகத்தை ஒப்புக்கொண்டார். இவர் 1859-ம் வருஷம் மார்ச்சு மாஸத்தில் பிறந்தவராகையால் இவருக்கு இப்பொழுது வயது 52. இவர் கேம்ப்ரிஜில் படித்து 1891 ம் வருஷத்தில் பி. ஏ. பட்டம்பெற்று 1894-ம் வருஷத்தில் எம். ஏ. பட்டமும் பெற்றார். ஆகையால் படிப்பு விஷயத்தில் மேதாவியென்று ஏற்படுகிறது. 1895-ம் வருஷத்தில் ஸ்காட்லாண்டில் மிட்லோதியன் என்னும் ஜில்லாவுக்கு ப்ரதி நிதியாக பேர்பெற்ற க்ளாட்ஸ்டனுக்குப் பிறகு பார்லிமெண்டில் மெம்பரானார். அப்பொழுது அவர் விவஸாயம், ஸுகாதாரம், முனிஸிபாலிட்டி முதலிய விஷயங்களைப்பற்றி அடிக்கடி கவனித்து வந்தார். இவர் லிபரெல் கட்சியைச் சேர்ந்தவர். 1908-ம் வருஷத்தில் ஆஸ்ட்ரேலியாவிலுள்ள விக்டோரியா மாகாணத்துக்கு கவர்னராகப் போனார்.

அங்கே இருந்த மூன்று வருஷத்தில் அந்த மாகாணம் முழுவதும் சுற்றிப்பார்த்து மூலை முடுக்குகளிலுள்ள விவஸாயம், பால், தயிர் வியாபாரம், கறிகாய் பயிரிடுதல், சுரங்கவேலை முதலிய பல ஜீவனோபாயங்களையும் கண்டறிந்து அவைகளைச் சீர்படுத்துவதில் வெகு தீவிரமாய் வேலைசெய்தார். விக்டோரியா மாகாணத்தின் பொருளாதார நிலைமையைத் தூக்கிவிட்டதில் இவரைவிட உழைத்தவர் வேறு ஒருவருமில்லையாம். இவர் சிற்றுயிர் லக்ஷண சாஸ்திரங்களில் மகாவல்லவர். இவருக்கு சித்திரப் படங்களிடத்திலும் அவைகளை எழுதுவதிலும் மகாப் பிரியமாம். இவர் ஒரு படம் நல்லது கெட்டது என்று சொல்லிவிட்டால் அது ஸரிதான். அதற்கு மேல் அப்பீல் கிடையாது. இப்படிப்பட்ட அநுபோகமும் நல்ல குணங்களும் பொருந்திய கவர்னர் காலத்தில் நம்முடைய ராஜதானிக்கு பல விதங்களில் க்ஷேமமுண்டாகுமென்று எண்ணுகிறோம்.

### Delhi and Its Sights.

டில்லியும் அதன் காட்சிகளும்.— டில்லி இந்தியாவில் பேர்போன நகரம். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது, அது ஆதிகாலம் முதல் இந்திய அரசர்களால் ஏற்படுத்தப்பட்டு பல அரசர்கள் ஆண்டு வந்தார்கள். இரண்டாவது, இந்தியாவைப் படை எடுத்துவந்த ஒவ்வொரு சண்டைக்காரரும் டில்லியைத்தாண்டி வரவேண்டியிருந்ததால் அதை முதல் முதலாக கைப்பற்ற எத்தனித்திருக்கிறார்கள். டில்லிப் பட்டணம் நீளத்தில் 10 மயிலும் அகலத்தில் 6 மயிலும் உள்ளது. அதன் மத்தியில் 'சண்ட்னி சௌக்' என்று சொல்லப்பட்ட ஒரு மயில் நீளமுள்ள ஒரு அழகான தெரு இருக்கிறது. பட்டணத்தின் வடபாகத்துக்கு 'ஷாஜஹானபாத்' என்று பேர். இதற்குள்தான் டில்லி கோட்டையிருக்கிறது. ஷாஜஹானபாதைச் சுற்றிலும் ஒரு பெரிய மதில் இருக்கிறது. அந்த மதிலிக்கு அநேக கேட்டுகள் (வாசற்படிகள்) உண்டு. இவைகளில் முக்கியமானவை :—காஷ்மீர் ' கேட் வடக்கிலுள்ளது. மேற்கு மதிலில் ஆஜ்மீர், பரஷ்கானு, காபூல், லாகூர் ஆகிய இந்த கேட்டுகளும், தெற்கு மதிலில் டர்கோமன், டில்லி கேட்டுகளும் இருக்கின்றன. டில்லி கேட்டுக்கு இரண்டு மைலுக்கு தெற்கேயுள்ள பாகத்துக்கு பிரோஸ் பாத் என்று பேர். இதற்கு இரண்டு மைலுக்குத் தெற்கேதான் பாண்டவ ராஜ்யத்துக்கு ப்ரதான பட்டணமாகிய இந்த்ரப்ரஸ்தம்.

டில்லியைப்பற்றி மகாபாரதத்தில் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது டில்லி கேட்டுக்கு இரண்டு மைலுக்குத் தெற்கேயுள்ள 'இந்த்ரபாத்' என்று சொல்லப்படுவதுதான் பாண்டவர்கள் ஏற்படுத்திய "இந்த்ர ப்ரஸ்தம்." அவர்கள் அங்கே



CHANDNI CHOWK, DELHI.
சண்ட்னி சௌக், டில்லி.



JUMMA MUSJID—EXTERIOR VIEW, DELHI.
ஜும்மா மசூதி, டில்லி. (வெளிப்பார்வை.)



THE CASHMERE GATE, DELHI.
காஷ்மீர் கேட், டில்லி.



LAHORE GATE.
லாகூர் கேட், டில்லி.




THE DEWAN-I-KHAS, FORT, DELHI.

தீவான்-இ-காஸ்.



KUTB MINAR, NEAR DELHI.

குடுட் மைனர்.

காடுகளிலிருந்தவர்களைத் துரத்தி, ஒரு பட்டணத்தைக் கட்டினார்கள். அதில் அநேக மாளிகைகள் கட்டியிருந்ததால் அதை தேவேந்திரன் பட்டணமாகிய அமராவதிக்கு ஒப்பாகச்சொல்வது வழக்கம். இங்கேதான் பாரதத்தில் சொல்லியிருக்கும் அநேக விஷயங்கள் நடந்தன.

டில்லிப்பட்டணத்தைப்பற்றி மகாபாரதம் முதல் தொடர்ந்தேத்தியாய் சரித்திரம் இல்லை. கிறிஸ்து பிறந்து பதினோராவது நூற்றாண்டில் அனங்கபால் என்னும் ஒரு ராஜபுத்ரத்தலைவன் டில்லியிலுள்ள சிகப்புக் கோட்டையைக் கட்டி அதன் அருகில் தன்னுடைய ப்ரதான பட்டணத்தை ஸ்தாபித்தான். அவனுடைய வம்சஸ்தர்கள் 100 வருஷம் ஆண்ட பிறகு விசால்தேவ் என்னும் ஒரு ஆஜ்மிர் தேசத்துத் தலைவன் ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டான். இவருடைய பேரன் தான் ப்ரித்வி ராஜன்; இவரை ரெய்பிதோரா என்றும் சொல்வதுண்டு. இவர் டில்லி, ஆஜ்மீர் இரண்டுக்கும், அரசனாயிருந்தார். 1193-ம் வருஷத்தில் மகமத் கோரி என்பவன் ப்ரித்விராஜனோடு சண்டை செய்து அவனைக் கொன்றுவிட்டான். மகமத் கோரியின் அடிமையாகிய குத்புத்தீன் என்பவன் 1194-ம் வருஷத்தில் டில்லியை கைப்பற்றி 1206-ம் வருஷத்தில் மகமதிய ராஜ்யத்தை ஸ்தாபித்தான். இந்த குத்புத்தீன்தான் டில்லியைப் பிடித்ததும் தன்பேருடைய ஒரு மசூதியையும், குதுப்மைனார் என்னும் பேர்போன ஸ்தம்பத்தையும் கட்டினான். பிறகு பலவம்சத்துப் பல அரசர்கள் தேசத்தை ஆண்டுவந்தும் மொகலாய வம்சத்தைச்சேர்ந்த ஷாஜிஹான் காலமுதல் 1638-ம் வருஷத்தில் தற்கால டில்லி ஏற்பட்டு அதற்கு ஷாஜஹானபாத் என்னும் பேர் உண்டாகி மொகலாய அரசர்களின் ப்ரதான பட்டணமாயிற்று. அவர்தான் தற்காலத்திலிருக்கும் கோட்டை, அரண்மனை, ஜம்மா மசூதி, முதலிய பேர்போன கட்டிடங்களைக் கட்டினார். பிறகு மொகலாய அரசர்களின் வலிமை குறைந்து மராட்டியத் தலைவர்களின் ப்ராபல்யம் அதிகமாயிற்று. 1803-ம் வருஷத்தில் இங்கிலீஷ்காரர்கள் டில்லியில் நடந்த சண்டையில் மராட்டியரைத் தோற்கடித்து, அந்த நகரத்தையும் அதை ஆண்டுவந்த மொகலாய சக்ரவர்த்தியையும் தம்முடைய பாதுகாப்பில் வைத்துக்கொண்டார்கள். கடைசியாக 1857-ம் வருஷத்து கலகத்தில் டில்லியை இங்கிலீஷ்க்காரர்கள் பூராவும் கைப்பற்றிக்கொண்டார்கள். அது முதல் பட்டணம் வரவர விர்த்தியாகிக்கொண்டு வருகிறது. இப்பொழுது அதில் மில்களும் ஆலைகளும் இருக்கின்றன. கடைசி ஸென்ஸஸ்ப்படிக்கு 208,575 ஜனங்கள் இருப்பதாகத் தெரிகிறது. 1876-ம் வருஷத்தில் காலஞ்சென்ற ஏழாவது எட்வர்ட் அங்கே வந்திருந்தார். 1877-ம் வருஷம் ஜனவரிமாதம் முதல் தேதியன்று அங்கேதான் விக்டோரியா மகாராணி சக்ரவர்த்தினியானதாக விளம்பரம் செய்யப்பட்டது. அதே மாதிரி 1903-ம் வருஷத்தில் லார்ட் கர்ஸன் ஒரு தர்பார் கூட்டி ஏழாவது எட்வர்ட் சக்ரவர்த்தியானதை விளம்பரம் செய்தார். டில்லி இவ்வளவு சரித்திர விசேஷமும் சிறப்புமுள்ள நகரமானதையால்தான் வருகிற டிசம்பர்மாதம் 12-ந்தேதியன்று நமது சக்ரவர்த்தி ஐந்தாவது ஜார்ஜூம் அங்கே நேரில்வந்து விஜயம் செய்து தாம் சக்ரவர்த்தியானதை விளம்பரம் செய்வார்.

## DESTRUCTION OF COCOANUT BEETLES.

BY

N. VENKATRAMA AIYAR.

## தென்னைமர வண்டுகளை வேரறுக்கும் சுதேச முறைகள்.

---

தென்னை மரம் இப்பொழுது முன்போல் ஸம்ரக்ஷிக்கப்படுவதில்லை. சிலவருஷங்களாய் தக்கமழை யில்லாமையால் நன்ருய்க் காய்க்கிறதுமில்லை, அதவாது செழித்துப் பலிக்கும் காலம்வந்தாலும் வண்டுகள் மரத்தைக்கெடுக்கின்றன வென்று பலர் முறையிடுகிருர்கள். மழையைத் தக்க ஸமயத்தில் நம்மால் வரவழைக்க முடியாவிட்டாலும், மரங்களைக் கெடுக்கும் பூச்சிகளைத் தொலைக்க நாம் ஏற்பாடு செய்யக்கூடும். கொஞ்சகாலத்திற்கு முன் தான் கவர்ன்மெண்டு பாடனிஸ்டு ஒருவர் மரத்தைக்கெடுக்கும் புழுக்கள் இரண்டு விதம் என்றும், அவைகளில் ஒன்று வெட்டுக்கிளிகள் பயிரையழிப்பதுபோல் தோப்புத்தோப்பாய் அழிக்கக் கூடியதென்றும், அவைகளைக்கொல்லும் விதம் எப்படி யென்றும் வெளியிட்டார்.

இப்படிப்பட்ட புழுக்கள் மரத்தில் எவ்விடத்திலிருந்தாலும் அவைகளைக்கொல்வதற்கு நம்மவர்களுக்குள் வெகுகாலமாய் சிலமுறைகள்உண்டு. புழுக்கள் மரத்தின் வேரிலுமிருக்கலாம், நடுமரத்திலுமிருக்கலாம், உச்சியில் மட்டைகள் கிளைக்கு மிடத்திலும் இருக்கலாம். மரத்தின்வேரில் புழுக்களிருந்தால் முத்துக்கொட்டை எண்ணெய் காய்ச்சியபின்பு மீதியுள்ள கசண்டு நீர் முதலியவற்றை மரத்தடியில் கொட்ட புழுக்கள் அவற்றையுண்டு அடியோடு மாளும். அடி மரத்திலிருந்தால் மரத்தில் தொளைச்செய்து மரப்பட்டைகளை உலக்கையால் இடித்துப் புண்செய்ய புழுக்கள் நாசமடையும். மட்டைகள் கிளைக்குமிடத்தில் புழுக்களிருந்தால் சாணுனை மரத்தில் ஏறி மட்டைகளைக் கலக்கமிநிக்கும்படி செய்து, பிறகு மட்டைகளுக்கு மத்தியிலுள்ள இடங்களில் சலங்கை மணலை தூவிக்கிடிக்கச் சொல்வது முண்டு. புழுக்களும் மட்டைகளுக்கு மத்தியில் இடவெளி கண்டவுடன் வெளியில் வந்து மணலில் சிக்கிக்கொண்டு பிராணனைவிடும்.

சாணுனுக்கும் மரத்தைப் பார்த்தவுடன் புழுவுள்ளமரம் இன்னதென்று தெரியுமாம். ஆகவே தென்னை, பனை முதலிய மரங்களின் வர்க்கத்திற்கே சாணுனை புருஷனென்று நம்மவர்கள் சொல்வதுண்டு.

நிகோபார் தீவிலிருந்து இந்நாட்டிற்குக் கொண்டுவந்து பயிரிடப்படும் தென்னம் பிள்ளைகள், பிள்ளைகள் வைத்து ஐந்து அல்லது ஆறு வருஷங்களுக்குள் பலனைக்கொடுக்கின்றன வாயினும் அதிகவருஷங்கள் காய்ப்பதில்லை. ஆனாலும் அவைகள் காய்க்கும் காலத்தையும் கொடுக்கும் பலனையும் யோஜித்துப் பார்த்தால் லாபகரமாகவே யிருக்கின்றன. ஆகவே கவர்ன்மெண்டு பாடனிஸ்டுகள் இந்த ஜாதிமரம் இந்நாட்டில் வெகுகாலம்காய்க்கும்படிக்கு தக்க முறைகளோ, உரமோ, கண்டு பிடித்து ஜனங்களுக்குப் போதித்தால் நலமாயிருக்கும்.

என். வெங்கெட்டராம ஐயர்.

## HIS MAJESTY EMPEROR GEORGE V.

## மாட்சிமை தங்கிய மகாராஜா ஜார்ஜ் சக்ரவர்த்தி.



ஒவ்வொருவனும் தன்னுடைய கடமையைச் செய்து முடிக்கவேண்டுமென்று இங்கிலாந்து எதிர்பார்க்கிறதென்று லார்ட் நெல்ஸன் என்னும் பேர்போன ஆங்கிலேய கப்பல் சேனாதிபதி சொன்னார். அது போலவே ஆங்கிலேய அரசரொவ்வொருவரும் அத்தேசத்துக்காகவும் அதைச்சேர்ந்த பெருமைவாய்ந்த மஹாராஜ்யத்துக்காகவும் தம்முடைய கடமையைச் செலுத்தவேண்டுமென்று இங்கிலாந்து எதிர்பார்ப்பதாகச் சொல்வதும் பொருத்தமுள்ளதாகும். சென்ற மூன்று தலைமுறைகளாக ஆங்கிலநாட்டு முடிமன்னர்கள் இங்கிலாந்து விஷயமாகத் தங்கள் கடமையை நிறைவேற்றியிருக்கிறார்களென்பதை அவ்விராஜ்யத்தில் வாழும் குடி ஜனங்கள் நன்றியறிதலுடன் புலகாலும் மனதார ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். புகழுடம்புபெற்ற விக்டோரியா மகாராணியார் ஆங்கிலேய ராஜ்ஜியத்துக்கு ஓர் அரும்பெரும் பாக்கியமாய் விளங்கினாரென்பதை எவரும் மறுக்கத் துணியார். அந்த சக்ரவர்த்தினியின் மங்கள நாமத்தைச் சொன்னமாத்திரத்தில் ராஜ்யத்திலுள்ள சகல ஜனங்களும் மந்திரத்தால் கட்டுண்டவர்போல் பரவச மடைவர். அவ்வரசியார் நம் இந்தியாவை வந்து பாராவிட்டாலும், இந்நாட்டிலுள்ள பிரதி கிராமத்திலும் நகரத்திலும் எளிய குடிசைகளிலும் பணம் பெருத்த அரண்மனைகளிலும் அவ்வம்மையின் பெயர் சர்வசாதாரணமாய் வழங்கிவருவதைக் காணலாம். விக்டோரியா மஹாராணி அரசாண்ட காலத்தில் இங்கிலாந்து தேசத்தின் ஜன சமூகவாழ்க்கை ஓங்கி உயர்ந்தது; ராஜாங்க முறைமையும் சட்ட ஒழுங்குகளை யனுசரித்து அபிவிர்த்தியடைந்தது. கடலுக் கப்பாலுள்ள ப்ரிட்டிஷ் ஆளுகைக்குட்பட்ட இந்தியா முதலிய நாடுகளின் க்ஷேமாபிவிருத்தியில் அவ்வம்மை ஆழ்ந்த அக்கரை பாராட்டி வந்தாள். அவருடைய குமாரராகிய ஏழாம் எட்வர்ட் மன்னரும் தம் அன்னையின் மாதிரியையே பின்பற்றி, தயாளகுணமே உருவெடுத்து வந்ததுபோல் விளங்கி, கருத்திலும், சொல்லிலும், நடையிலும் கம்பீரமாயும் ஊள்ளக் கனிவுடனும் பிறர் மனதைக் கவரும் வண்ணமாகவும் பிரவர்த்தித்து, தனக்குப்பின் ராஜ்ய பாரம் வகிக்க வருபவர்கள் பின்பற்றத் தக்க நிதர்சனமாய்ப் பிரகாசித்தார்.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த முன்னோர்களின் மரபில் உதித்த நமது ஜார்ஜ் மஹாராஜாவும் இங்கிலாந்து தேசத்துக்கும் அதைச் சார்ந்த மஹாராஜ்யத்துக்கும் உயர் நலங்கள் ஓங்கி உயரும்படி உத்தம நெறியில் ஒழுகி அரசாள்வார் என்பதற்கு வேண்டிய அறிகுறிகள் ஏற்கனவே பிரத்யக்ஷமாய்க் கொண்டுவருகின்றன. பால்யமுதல் இவருக்கு ஏற்பட்டிருக்கும் பயிற்சியும் இவருடைய அந்தஸ்துக்குரிய உயர்ந்த பொறுப்புகளை இவர் தாங்குவதற்குத் தகுந்த வண்ணமாகவே அமைந்திருக்கிறது. பிறர் தமக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி அதிகாரம் செலுத்த விரும்புவோர் தாமே கீழ்ப்படியக் கற்றிருக்கவேண்டும். ஆதிமுதற்கொண்டே கடற் பிரயாணத்தில் பிரிய முள்ள இம் மன்னர் கப்பற்சைன்னிய சேவகத்தில் அமர்ந்து, தமக்கு எஜமானர்களாய் ஏற்பட்டவர்களுக்குக் கீழ்ப்படிந்து தம் கடமையைக் குறைவறச் செலுத்திப் படிப்படியாய் கப்பற் சேனாதிபதியின் பதவியை அடைந்தார். அவர் பிற்காலத்தில் ராஜ்யபாரத்தைத் தாங்

இச் செய்ய வேண்டிய காரியங்களுக்கு இவ்வொன்றே உத்தமமான பயிற்சியாகும். அன்றியும் நம் அரசர் உலகமுழுவதும் விஸ்தாரமாய்ப் பிரயாணம் செய்து, ஆஸ்ட்ரேலியா, தென் ஆப்ரிகா, இந்தியா முதலிய தேசங்களை நேராகக் கண்டு பெற்றிருக்கும் அனுபவ ஞானமானது ப்ரிடிஷ் ஐக்கிய ராஜ்யத்தை ஆளுவதில் அவருக்குப் பெரிதும் பிரயோஜனகரமாயிருக்குமென்பதில் சந்தேகமில்லை.

உலகளாவிய மஹா ப்ரிடிஷ் ராஜ்யத்தில் வாழும் பிரஜா கோடிகளின் மனதை இம் மன்னர் ஆச்சரியகரமாய்க் கவர்ந்திருக்கிறாரென்பது பின்வரும் அவரது சரித்திரத்தினால் இனிது விளங்கும்.

ஜார்ஜ் இளவரசர் 1865-ம் வருஷம் ஜூன் மாதம் 3-ந்தேதி காலையில் ஒரு மணியடித்த சிறிது நேரத்திற்குள் ஜனனமானார். சிசுப் பிராயத்திலுள்ள இளவரசருக்கு விண்ட்ஸர் மாளிகையில் ராஜாங்க வைபவத்துடன் நாமகரணச் சடங்கு நடந்தது. அப்போது வேல்ஸ் இளவரசராகவும் இளவரசியாகவுமிருந்த ஏழாம் எட்வர்ட் அரசரும் அலெக்ஸாந்த்ரா அரசியும் தம் குழந்தைகளைக் கூடிய மட்டிலும் தம்மிடத்திலேயே வைத்துக்கொண்டிருந்தார்கள். பிரயாணம் போகும்போது கூட, தம்முடனே அழைத்துச் செல்வார்கள். குழந்தைகளைப் பள்ளிக்கூடத்தில் போடும் வரையில் இவ்விதமாகவே நடந்து வந்தது. ஜார்ஜ் இளவரசரும் இவரது மூத்த சகோதரரும் ஆகிய இரண்டு சிறுவர்களும் அக்காலத்தில் தம் தாய்தந்தையர்கள் போகும் இடங்களுக்கெல்லாம் சென்று சகலருக்கும் அறிமுகமாயிருந்தார்கள். ஆனால் அரசிளங்குமரர்கள் பால்யப்பருவத்தில் வெகு சீக்கிரத்தில் கல்வி பயிலத் தொடங்குவது தொன்றுதொட்டு வரும் வழக்கமாதலால், ஜார்ஜ் இளவரசருக்கும் அவரது அண்ணனுக்கும் வேலையின்றி வீண்பொழுது போக்கும் சமயம் அநேகமாய்க் கிடைக்கவே கிடைக்காது. சகோதரர் இருவருக்குள்ளும் அதிக குசாலாயும் துணிவாயும் இருந்தது ஜார்ஜ் இளவரசரேயாகையால், அவர் சிற்சில சமயங்களில் விஷமச்சேஷ்டைகளை வேடிக்கையாகச் செய்து "ராஜ கம்பீரக் குசால்பேர்வழி" என்னும் பட்டமும்பெற்றார்.

பால்ய காலத்தில் இவர்கள் அனுவசியமான கட்டு திட்டங்களில்லாமல் சுதந்தரமாயும் ஆடம்பரமில்லாமல் சாமான்யமாயும் வளர்ந்து வரும்படியாகவே அரண்மனையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 7-வது எட்வர்ட் அரசர் வேல்ஸ் தேசத்து இளவரசராக இருந்த சமயத்திலே 1875-ம் வருஷத்தில் இந்தியாவைப் பார்க்கவந்த காலத்தில், அரசிளங்குமரர் இருவரும் பால்யராயிருந்தாலும், தம் அன்னைக்கு அங்க ரக்ஷகர்களாகவும் அருங்குணம் பொருந்திய . படைவீரர்களாகவும் அமர்ந்து சாத்தியமானபோதெல்லாம் அவ்வம்மையுடன் கூடவே சென்றார்கள். அவர்கள் புஸ்தகங்களைக் கையிலெடுக்கத் தொடங்குவதற்கு முன்பே பணிவிலும் வணக்கத்திலும் பிரதமோபதேசங்களைத் தம் அன்னையினிடமிருந்தே பெற்றார்கள். வேல்ஸ் இளவரசர் விஷயத்தில் புஸ்தகப்படிப்புக்கு எவ்வளவு பிராதான்யம் ஏற்பட்டிருந்ததோ அதற்கு அதிகமான பிராதான்யம் அந்த புஸ்தகப் படிப்புக்கு இந்த ராஜ குமாரர்களின் பயிற்சியில் ஏற்படவில்லை. ஜார்ஜ் மன்னருக்கு கடற்பிரயாணத்தில் இயல்பாகவே பிரியமுண்டாயிருந்தது. சார்ல்ஸ் கிங்க்ஸ்லி என்னும் ஆங்கில நூலாசிரியரும், தம்முடைய வாத்தியாராகிய கானன் டால்டன் என்பவரும் எழுதியுள்ள கதைகளைச் சொல்லக்கேட்பதனால் இந்தக்கடல் பிரயாண விருப்

பம் அவர் மனதில் குடிகொண்டிருக்கக் கூடும். இவருக்கு மூத்த சகோதரரிருந்த படியால் இவர் பட்டத்துக்கு வருவார் என்னும் எண்ணத்துக்கிடமில்லே. தாம் கடலோடியாயிருக்கப் பிரியப்படுவதால் தமக்கு ராஜ்ய பட்ட உரிமை இல்லாததைப்பற்றி எவ்வளவோ சந்தோஷப்படுவதாய் அவர் அக்காலத்தில் சொல்லிக்கொள்வாராம். ஆனல் ஈசுவர சங்கல்பம் வேறு விதமாய் நிறைவேறி விட்டது. ஆயினும் என்ன? கடலோட்டியாக அவர்பெற்றிருக்கும் அனுபவமே மற்றப்படி அவருக்காக ஏற்பட்டிருக்கக்கூடிய எவ்விதப் பயிற்சியைக்காட்டிலும் ராஜ்யபாரம் நடத்துவதில் அவருக்கு அதிகமாகப் பயன் படுவதாய் இருக்கலாகாதா?

வேல்ஸ் இளவரசர் தம் குமாரர்கள் உலகானுபவத்தில் முதிர்ந்த பழக்கம் பெறும் பொருட்டும் சகல விஷயங்களையும் அவர்கள் தாமாகவே நேரில் கண்டு நிதானித்து தம் தம் அபிப்பிராயங்களை அமைத்துக்கொள்ளவேண்டியும், பற்பல சந்தர்ப்பங்களில் இன்ன விதமாய் நடந்துகொள்ள வேண்டுமென்பதைத் தெரிந்துகொள்ளும்பொருட்டும் தக்க ஏற்பாடுகள் செய்யத் தீர்மானித்தார். இந்தத் தீர்மானத்தை அனுசரித்து எட்வர்ட் இளவரசரும் ஜார்ஜ் இளவரசரும் 1877-ம் வருஷத்தில் ப்ரித்தானியா என்னும் பயிற்சிக் கப்பலில் உத்தியோகமாய் அமர்ந்தார்கள். இந்தக் கப்பலில் இருக்கும்போது இவர்கள் ராஜ ஆடம்பரங்களை யொழித்து மற்ற ஜனங்களுடன் சமத்துவமாகப் பழகக் கற்றுக் கொண்டார்கள். பிறகு 1879-ம் வருஷத்தில் புக்காண்டீ என்னும் கப்பலில் சேர்ந்து ஏறக்குறைய மூன்று வருஷகாலம் வேறு வீடு வாசலொன்றும் அறியாதவர்களாய் அதிலேயே காலங் கழித்தார்கள். இந்த காலத்தில் அவர்களுக்குண்டான உலகானுபவம் எக்காலத்தும் மறக்கக்கூடியதல்ல. எவ்வித குணமும் மனதில் அழுந்திப் பதியும்படியான அந்த வயதிலேயே ராஜகுமாரர்களின் நடத்தை நேரான வழியில் அமையலாயிற்று. சிறுவர்களாய்க் கப்பலிற் சேரப்போனவர்கள் அதிலிருந்து திரும்பி வந்தபோது ஆண்மக்களுக்குரிய உத்தம குணங்கள் வாய்ந்து விளங்கினர்கள். இந்தக் கப்பலிலிருக்கும்போது இவர்கள் ஜிப்ரால்டர் மார்க்கமாக கனேரி தீவுகளையும் மேற்கு இந்தியத் தீவுகளையும் போய் பார்த்தார்கள். சிலகாலங்கழித்து தென் அமெரிக்காவுக்கும் ஆப்ரிக்காவுக்கும் சென்றார்கள். அங்கிருந்து ஆஸ்த்ரேலியாவுக்குச் சென்று அந்த ராஜ்யத்தில் தாம் போனவிடங்களிலெல்லாம் சந்தோஷமாய் வரவேற்கப்பெற்று அங்குள்ள சகலமான விசேஷ காட்சிகளையும் கண்டுகளிப்புற்று, அவ்விடத்திலிருந்து புறப்பட்டு பிஜி தீவையும் ஜப்பான் தேசத்தையும் தரிசித்தார்கள்.

அரசிளங்குமரர் ஜப்பான் நாட்டில் விசேஷ காலம் தங்கியிருந்து அங்குள்ள பற்பல விநோதக்காட்சிகளைக் கண்ணுற்று, ப்ரஸித்தமான ஆலயங்களுக்குச் சென்று பௌத்தமத விஷயமாயும் ஷிந்தோமத விஷயமாயும் பற்பல சங்கதிகளை விசாரித்துத் தெரிந்து கொண்டார்கள். ஜப்பானியர்களைப் பற்றி ராஜகுமாரர்கள் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடும்போது "நாங்கள் பார்த்துள்ள ஜனங்களுக்குள்ளே அவர்கள் மிகுந்த அமெரிக்கையும், மரியாதையும், நல்லிணக்கமும், உற்சாகமும் வாய்ந்தவர்கள்" என்று சொன்னர்கள். சீனதேசமும் இவர்களுக்குப் பற்பல விதங்களில் மனோஹரமாய்த் தென்பட்டது. இலங்கையில் இவர்கள் பார்த்ததெல்லாம் பூரண சந்தோஷமளித்தது. பிறகு ஈஜிப்ட் தேசம் போனர்கள். அங்கிருந்து புறப்பட்டு கிறிஸ்துமதத்தாருக்குப் புண்ய பூமியாகிய பலஸ்தீன வில் விஸ்தாரமாய்ப் பிரயாணம் செய்

தார்கள். பிறகு ஸிரியா தேசத்தில் சிறிது காலம் தங்கியிருந்து, க்ரீஸ்தேசத்துத் தலை நகராகிய ஆதன்ஸூக்கு வந்தார்கள். இப்படி பிரயாணத்தில் இரண்டு வருஷம் கழித்து இங்கிலாந்துக்குத் திரும்பி வந்தார்கள்

ஜார்ஜ் இளவரசர் இங்கிலாந்தில் சிலகாலம் ஓழிவடைந்திருந்து மறுபடியும் மூன்றுவருஷ காலம் கப்பலுத்தியோகத்தில் அமர்ந்து தம் அலுவல்களைப் பார்த்துவந்தார். 1891-ம் வருஷத்தில் இவர் தம் ஜன்மதேசத்துக்குத் திரும்பியபோது இவருக்குக் கமாண்டர் (சேனைத்தலைவர்) உத்தியோகம் அளிக்கப்பட்டது. இந்த உத்தியோகத்தைப் பெற்ற சில மாதத்துக்குள்ளாக இவருடைய தமையனான எட்வர்ட் இளவரசர் தேகவியோகமடையவே, இவருடைய அந்தஸ்தானது எதிர்பாராத விதமாய் மாறியது. அது காரணமாக இவர் பட்டத்துக்குரியவராகவே, தாம் இனி ராஜாவாக வரவேண்டியதற்குரிய காரியங்களையே முக்கியமாகக் கவனிக்கவேண்டியவரானார். இதனால் கப்பற்சைனிய விஷயத்தில் இவர் முன்போல் அதிகமாய் உழைப்பதற்கு அவகாசம் குறைந்துபோய் விட்டது. ஆயினும் 1901-ம் வருஷத்தில் இவர் ரியர் ஆட்மிரல் என்னும் கப்பற்சேனைப் பின்னணியத்தலைமை உத்தியோகத்தையும், 1903-ம் வருஷத்தில் வைஸ் ஆட்மிரல் என்னும் உத்தியோகத்தையும், 1907-ம் வருஷத்தில் அட்மிரல் அந்தஸ்தையும் வகிக்கலானார். கடைசியாக 1908-ம் வருஷத்தில் கனடாவுக்குச் சென்றபோது, இண்டாமிடபில் என்னும் போர்க்கப்பலில் தலைமைவகித்துக் கொடிவிரித்துக் கடற்சைனியத்தை நடத்திச் சென்றார்-

ஜார்ஜ இளவரசர் தம் தமையனார் மரித்தது முதல் ராஜாங்க காரியங்களில் பழகத்தொடங்கினார். சமயம் வாய்த்தபோதெல்லாம் பார்லிமெண்ட் சபைக்குப்போய் அங்கு நடக்கும் நடவடிக்கைகளை கவனித்து வந்தார். பிறகு ராஜகுமாரருக்கும் மேரி ராஜகுமாரத்திக்கும் கல்யாணம் நடந்தேறிற்று.

கல்யாணமானது முதல் வருஷத்தில் ராஜகுமார தம்பதிகள் ப்ரிடிஷ் ராஜ்யத்துக்குள்ளிருக்கும் வெவ்வேறு பிரதான நகரங்களுக்கு விஜயம் செய்து கல்யாணச் சீர்களும் வந்தனோபசாரப் பத்திரங்களும் பிரஜைகளால் சமர்ப்பிக்கப் பெற்றார்கள். 1884-ம் வருஷத்தில் இவர்களுக்கு ஒரு ஆண்குழந்தை பிறந்தது. விக்டோரியா மஹாராணியின் வைர ஜூபிலி மஹோத்ஸவம் கொண்டாடபட்ட 1897-ம் வருஷத்திலே இவர்களுக்கு மூன்றாவது குழந்தையாகிய பெண் பிறந்தது.

இவர்கள் தம்மக்களுக்கு வித்தியாப்பியாஸம்செய்வித்து அவர்களைநன்னெறியில் பழக்குவதில் தங்கள் குடும்பமே தேசத்து ப்ரஜைகளுக்கெல்லாம் உத்தமமான திருஷ்டாந்தமாய் இருக்கவேண்டுமென்று கருதி அதற்குத் தக்கபடி நடந்தார்கள்.

ப்ரிடிஷ் ஜனங்கள் குடியேறி அரசு செலுத்தும் வெளி நாடுகளுக்கு இந்த ராஜகுமார தம்பதிகள் தரிசனம் அளித்து வரவேண்டுமென்று இவர்கள் கல்யாணத்திலேயே தீர்மானிக்கப் பட்டபோதிலும் அநேக சந்தர்ப்பங்களை உத்தேசித்து அந்தப்படிசெய்யமுடியாமற் போயிற்று. பிறகு 1900-ம் வருஷத்திலே ஆஸ்திரேலியா ராஜ்யத்தில் பார்லிமெண்ட் சபை ஸ்தாபிக்க வேண்டுமென்று நிச்சயிக்கப் படவே, அந்தச்சடங்கை விக்டோரியா மஹாராணியார் தமக்கு ப்ரதிநிதியாக ஜார்ஜ இளவரசரே நேரில் போய் நிறைவேற்றிவர வேண்டுமென்று விரும்பினர். பிறகு நடந்த தென் ஆப்பிரிக்கா யுத்தத்தில் குடியேற்ற நாடுகளெல்லாம் தாய் நாடாகிய இங்கிலாந்துக்குச் செய்த பரமோபகாரத்துக்காக ப்ரிடிஷ் ஜனங்கள் தங்கள் நன்றியறிதலை மஹாராணியின் பேரனைக்கொண்டு வெளியிடுவதே பொருத்தமுடையதாகுமென்று அபிப்பிராயப்பட்டார்கள். ஆகவே ஜார்ஜ் இளவரசரும் இளவரசியும் குடியேற்ற நாடுகளில் விஸ்தாரமாய்ப் பிரயாணம்செய்துவரவேண்டுமென்று சர்வாங்கீகாரமாகத் தீர்மானிக்கப் பட்டது. இந்த பிரயாணத்துக்கு வேண்டிய ஸகலஸந்நாஹமும்ஸித்தமாயிருக்கையில் விக்டோரியா மகாராணியாருக்கு உடம்பு ஸௌக்கியமாயில்லை யென்ற விசனகரமான ஸங்கதி தெரியவந்தது. அந்த தேகஅசௌக்கியமானது பலப்பட்டு மகாராணி இறந்துபோகவே, அதனால் ராஜகுமார தம்பதிகளின் பிரயாணம் நின்றுபோய்விடும்போலிருந்தது. ஆனால் எட்வர்ட் மஹாராஜா அந்த பிரயாணம் நடந்தேறு

வதுதான் காலஞ்சென்ற மகாராணியின் மனதுக்கு திருப்திகரமா யிருக்குமென்று ஓரேபிடியாய் நின்று, அதுநிறைவேறவேண்டு மென்று உத்தரவு செய்தார். இப்படி ராஜ குடும்பத்தில் பெருந்துக்கம் நேர்ந்தகாலத்தி லும் பிரஜைகளுக்குத் தாம் செலுத்தவேண் டிய கடமையையே பெரிதாக எண்ணிய மகா ராஜாவின் பெருந்தகைமையையும் தன்மறுப்பு உணர்ச்சியையும் ஜனங்கள் வியந்து கொண்டா டினார்கள்.

1901-ம் வருஷாரம்பத்தில் எட்வர்ட் மகா ராஜா வழியனுப்ப, ஜார்ஜ் இளவரசரும் மேரி இளவரசியும் தங்கள் நீண்ட பிரயாணத்தைத் தொடங்கினார்கள். அவர்கள் ஜிப்ரால்டர் மார் க்கமாகச்சென்று ஏடன் துறைமுகத்தை அடைந்து இந்தியா ராஜ்யத்தை அணுகி லங்கையைப் பார்த்துக்கொண்டு சிங்கப்பூரில் சிறிது தங்கி அங்குள்ள பிரஜைகள் மனப்பூர்வ மாய் அளித்த வந்தனோபசாரங்களை சந்தோ ஷத்துடன் ஏற்றுக் கடைசியாக ஆஸ்திரேலியா வின் ராஜதானிப்பட்டணமாகிய மெல்போர்ன் நகரம் வந்து சேர்ந்தார்கள். இங்கே ராஜ குமார தம்பதிகளை நகரவாசிகளும் துரைத் தன அதிகாரிகளும் சகல ராஜோபசாரத்து டனும் வரவேற்றார்கள். 1901-ம் வருஷம் மேமாதம் 9-ந்தேதியில் ஜார்ஜ் இளவரசர் ஆஸ்திரேலியா ராஜ்யத்தின் பார்லிமெண்ட் சபா ஸ்தாபனச்சடங்கை நடத்தினார். அப் போது "மகாராஜாவின் உபந்நியாச" த்தைப் படித்தபிறகு, ஜார்ஜ் இளவரசர் செய்த சுருக்க மான பிரஸங்கத்திலே, இந்தச் சடங்கை நடத் தும்படி தமக்கு ஆக்ஞை யளிக்கும் விசேஷ அதிகார பத்திரத்திற்கு விக்டோரியா மகா ராணி மரிப்பதற்கு முன்னதாகவே கையெ ழுத்துப் போடப்பட்டதென்றும், தென் ஆப் பிரிக்கா யுத்தத்தில் ஆஸ்திரேலியர் தடையின் றிச் செய்த பேருபகாரத்துக்காகவும் விக்டோ ரியா மகாராணியாரின் மரணத்தைக்குறித்து அவர்கள் காட்டிய அனுதாபத்துக்காகவும் எட்வர்ட் மகாராஜா அவர்களிடம் நன்றிபா ராட்ட விரும்புகிறாரென்றும் புது பார்லி மெண்ட் ஸ்தாபனத்தால் வெளியாகும் ஆஸ்த் ரேலிய ராஜ்ய ஒற்றுமையைக் குறித்து சந் தோஷிப்பதாயும், கடவுளின் கிருபையால் அந்த ஒற்றுமை காரணமாக ஆஸ்திரே லிய பிரஜைகளின் க்ஷேமாபிவிருத்தி உயர்ந் தோங்கி ப்ரிடிஷ் மஹா ராஜ்யம் பலப் பட்டு உரங்கொண்டு நிற்குமென்று உறுதி யாய் நம்பி யிருப்பதாகவும் சொன்னார். பார்லிமெண்ட் சபை ஸ்தாபனச் சடங்கு முடி ந்தவுடன் ராஜகுமார தம்பதிகள் ஆஸ்தி ரேலியாவிலுள்ள இதர முக்கிய நகரங்களுக் குச் சென்று, சென்ற விடமெல்லாம் சந் தோஷமாய் உபசரிக்கப் பெற்று, பிறகு அந் நாட்டை விட்டுப் புறப்பட்டு, அமெரிக்காவி லுள்ள ப்ரிடிஷ் குடியேற்ற நாடுகளாகிய கனடா, ந்யுபௌண்ட்லாந்து முதலிய தேசங் களையும் சுற்றிப் பார்த்துக் கொண்டு கடைசி யாகத் தம் ஜன்மதேசம் வந்து சேர்ந்தார்கள். அப்போது லண்டன் ப்ரஜைகள் அவர்களை வேல்ஸ் இளவரசரும் இளவரசியுமாக வர வேற்றார்கள்.

ஐந்தாவது ஜார்ஜ் அரசர் வேல்ஸ் இள வரசு பட்டத்திலிருக்கையில், தாம் பின்னர் மஹாராஜாவாக வர வேண்டியதற்கேற்ற காரி யங்களில் அப்பொழுது முதற்கொண்டே பழ கிவரலானார். எட்வர்ட் மஹாராஜாவும் அத ற்கு வேண்டிய சகல ஏற்பாடுகளையும் வித்த மாய்ச் செய்துவந்தார். ஜார்ஜ் அரசருக்கு ஸயன்ஸ் என்னப்படும் நூதன சாஸ்திரத்தை அனுஸரித்துக் குடி ஜனங்களின் க்ஷேமத்தை அபிவிருத்தி செய்வதில் அதிக சிரத்தை யுண்டு. மேரி அரசியும் ஜனங்கள் முன்னுக்கு வருவதற்கேற்ற பல காரியங்களைச் செய்து வருகிறார். ஊமை, நொண்டி, முடம், சித் தஸ்வாதீனமற்றவர், பிணியாளர், அகதிகள் முதலியவர்களை விசேஷமாக ஆதரித்து வருகி றார். லண்டனில் ஏழைகள் வசிக்கும் சுகக் குறைவான குடிசைகளுக்குத் தாமே நேரில் சென்று அவர்களின் நிலைமையை அக்கரை யாய் விசாரித்தறிந்து, வேண்டிய உதவி செய்து வருகிறார். புராதன நாகரிகத்தை விளக்கும் வஸ்துக்களைச் சேகரித்து வைப்ப தில் அரசிக்கு அதிக விருப்பம். அவர் விருந் தினரை உபசரிப்பதில் மிக்க அன்புகாட்டும் சுபாவமுள்ளவரானபடியால், அவ்வம்மையி னிடம் பிரீதி பாராட்டும் சிநேகிதர் விசேஷ மாய் ஏற்பட்டிருக்கிறார்கள்.

எட்வர்ட் மஹாராஜாவின் பட்டாபிஷேக காலத்தில், வேல்ஸ் இளவரசர் அநேக கடமை

களைச் செலுத்தவேண்டியிருந்தது; அவைகளை யெல்லாம் அவர் திருப்திகரமாகவே நிறைவேற்றினர்.

பிறகு வேல்ஸ் இளவரசரும் இளவரசியும் இந்தியாவை வந்து பார்த்து இந்தியபிரஜைகளிடம் தமக்குள்ள அன்பை இன்னும் அதிகமாய்ப் பலப்படுத்திக்காட்டினர்.

ஜார்ஜ் இளவரசர் இந்தியாவுக்குவந்து செய்த முதற் பிரசங்கத்திலேயே பின்வருமாறு பேசினர்:—"பாலியம் முதற்கொண்டே நான் இந்தியா தேசத்தில் தயை, ராஜபக்தி, உபசாரம், மரியாதை, தைரியம் முதலிய உயர்ந்த குணங்கள் குடிகொண்டிருக்கின்றனவென்று நினைத்துவந்தேன். இப்போது அந்த தேசத்துக்கே நான் நேராக வந்திருக்கிறபடியால், என்னுடைய பாலியகாலத்து எண்ணங்கள் ஸ்திரப்பட்டு வன்மையுறுமென்று இன்னும் சிலமாதத்தில் எனக்கு அனுபவசித்தமாய் ஏற்படுமென்பதில் சந்தேகமில்லை".

இளவரசர் கோரியபடியே அவர் இந்தியாவில் பார்த்து அனுபவ பூர்வமாய்த் தெரிந்துகொண்ட சகல சங்கதிகளும் அவருக்கு மகிழ்ச்சியை யுண்டாக்கினவென்று இந்தியர்களாகிய நாம் நம்புகிறோம்.

இப்படி இந்த ராஜகுமார தம்பதிகள் இந்தியாவிலும் பர்மாவிலும் நெடுக விஜய கோலாஹலவைபத்துடன் பிரயாணம் செய்து கடைசியாக காராச்சிபட்டணத்தில் இந்தியராஜ்யத்தினின்று புறப்பட்டுக் கப்பலேறித் தம் ஜன்ம பூமிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

இங்கிலாந்துக்கு அவர்கள் போய்ச் சேர்ந்ததும், லண்டன் நகரத்து முனிசிபல் சங்கத்தார் அவர்களை வரவேற்று உபசரித்தார்கள். அப்பொழுது இளவரசர் செய்த பிரசங்கம் மஹாவிசேஷமானது. அந்த பிரசங்கத்தினல், இந்தியா முழுவதும் துரைத்தனதாருக்கும் குடிஜனங்களுக்கும் முன்னிலும் அதிகமான ஒற்றுமையுண்டாகு மென்று லார்ட் மார்லி நம்புவதாகச்சொல்லி அந்த பிரசங்கத்தைக்கொண்டாடினர். அந்த பிரசங்கத்தில் இளவரசர் சொன்னதாவது:—

"இந்து தேசத்து ஜனங்களின் பொறுமையையும், ஆடம்பரமற்ற வாழ்க்கையையும், ராஜபக்தியையும், தெய்வபக்தியையும் நான் பிரத்தியக்ஷமாய்க் கண்டேன். இந்தியாவை நாம் மாத்திரம் இன்னும் அதிகமான ஒற்றுணர்ச்சியுடன் ஆளும் பட்சத்தில், அத்தேசத்தை ஆளும் காரியம் இன்னும் சுலபமாயிருக்குமென்று, நான் கண்டு கேட்டிருந்த விஷயங்களால், என் மனதில் படுகிறது. இந்தியா துரைத்தன விஷயத்தில் அக்கரை கொண்டிருக்கிற ப்ரிட்டிஷ் ஜனங்கள் அவ்விடத்துக்கு நேராகச்சென்று பார்த்து வருவது அவசியமானது. அப்படி செய்வதனல், துரபிமானம் நீங்குவதற்கும், தவறுன உணர்ச்சிகள் நிவர்த்தியாவதற்கும, ஒற்றுணர்ச்சியும் சகோதரத்துவமும் பெருகுவதற்கும் அவர்கள் பேருபகாரம் செய்தவராவார்கள். மேலும் நம் தாய்நடாகிய இங்கிலாந்துக்கும் நாம் ஆளும் நாடாகிய இந்தியாவுக்குமுள்ள ஐக்கியம் பலப்பட்டு பரஸ்பர நம்பிக்கையும் விருத்தியாகும்."

இளவரசருக்கு வர்த்தமானப் பத்திரிகைகளின் விஷயத்தில் விசேஷ மதிப்புண்டு. அதை அவர் பலதடவைகளிலும் தம் பிரசங்கங்களில் உதாரசுபாவத்துடன் வெளியிட்டிருக்கிறுர்.

எட்வர்ட் மகாராஜா திடீரென்று இறந்து போகவே வேல்ஸ் இளவரசர் ஐந்தாம் ஜார்ஜ் என்னும் பெயருடன் சிங்காசனமேறினர். தம் பிதாவின் உத்தரக்கிரியைகள் நடப்பதற்காகச் செய்யவேண்டிய ஸந்நாஹங்களிலும், தாம் புதிய அரசனுகச் செய்யவேண்டிய கடமைகளிலும் அவருக்கு ஒரு நிமிஷமாவது விராமமில்லாமலிருந்தது. அப்போது ப்ரிவி கௌன்ஸிலென்னும் அந்தரங்க ஆலோசனை சபையில் அவர் மஹாராஜாவாக வீற்றிருந்து புரிந்த பிரசங்கம் விசேஷமானது. அந்த பிரசங்கத்தின் முடிவுரையில் அவர் பின்வருமாறு பேசினர்:

"என் பிதா அனுசரித்த வழிகளைப் பின்பற்றி நடக்கவும், இந்த ராஜ்யங்களை ஆளச்சட்ட முறைப்படி அமைந்துள்ள துரைத்தனத்தை ஆதரித்து நடக்கவும் முயல்வதையே நான் சிரத்தையுடன் என் வாழ்நாளில் நான் நிறைவேற்றவேண்டிய உத்தேசமாகக் கொண்டிருக்கிறேன். பார்லிமெண்ட் சபையாரும் இத்தேசங்களின் பிரஜைகளும் என்னுடைய கஷ்டமான கடமைகளை நிறைவேற்றுவதில் எனக்குத்துணை நிற்பதுமல்லாமல், எனக்கு தேகவலிமையும் ஆரோக்யமும் அளிக்கும்படியும் என்னை நலவழியில் நடத்தி வரும்

படியும் கடவுளைப் பிரார்த்திப்பார்களென்றும் நான் நம்பியிருப்பது வீண்போகாதென்பது நிச்சயம். பிரஜைகளின் க்ஷேமத்துக்காக செய்யப்படும் ஒவ்வொரு காரியத்திலும் என் பிரியமுள்ள மனைவி எனக்கு சதாகாலமும் வாழ்க்கைத் துணைவியா யிருப்பாளென்பதை நினைக்கும்போது எனக்கு விசேஷ உத்ஸாஹம் உண்டாகின்றது.''

இந்து தேசத்து மன்னர்களுக்கும் பிரஜைகளுக்கும் அனுப்பிய செய்தியில் அவர் இதே விஷயத்தைப் இன்னும் தொடர்ந்து சொன்னதென்னவென்றால் :—

"எனது காலஞ்சென்ற பிதாவின் அபீஷ்டப்பிரகாரமும் அவர் செய்ததையே பின்பற்றியும், நான் என் ராஜமஹிஷி சஹிதமாய் ஐந்து வருஷங்களுக்குமுன் இந்தியாவை வந்து பார்த்தேன். அந்த பிரயாணத்திலே அந்நாடு முழுவதிலுமுள்ள பிரசித்தமான பெருத்த ராஜ்யங்களையும், எங்கள் நாகரிகத்தைவிட பழமையான நாகரிகத்தைக் காட்டும் ஞாபகச்சின்னங்களையும், ஜனங்களின் புராதன வழக்கங்களையும் சம்பிரதாயங்களையும், சுதேச ராஜாக்களையும், ஜனங்களையும், பட்டணங்களையும், நகரங்களையும், கிராமங்களையும் எங்கள் கண்ணாரக்கண்டு பழக்கம் பெற்றோம். அந்த அற்புதமான யாத்திரையில் எங்கள் மனதில் தீவிரமாய்ப் பதிந்த எண்ணங்களையும், அன்புடன் கூடிய தொடர்புகளையும் ஒருகாலும் மறக்க வொண்ணாது. நான் இனி செய்ய வேண்டிய கஷ்டமான காரியங்களிலே நீங்கள் எனக்கு விதேயதையோடு உடனிருந்து உழைப்பீர்களென்று நம்புகிறேன். என்னுடைய ஆளுகைக்கு உற்சாகத்தை யூட்டுவது இந்தியாவின் க்ஷேமத்தில் எனக்குள்ள அபிமானமேயாகையால் அதற்குத் தக்கப்படி நீங்கள் மனந்தளராமல் நடப்பீர்களென்று நம்புகிறேன்."

இப்படி யனுப்பப்பட்ட செய்தியைப் பெற்று, இந்தியா முழுவதிலுமுள்ள ஜனங்கள் அபரிமிதமான உற்சாகத்துடன் ஆர்ப்பரித்தது சகஜந்தானே.

"கடலுக்கப்பாலுள்ள என் ஜனங்களுக்கு அனுப்பும்" செய்தியில் அவர் கூறியதாவது :—

"என் ராஜ்யங்களெல்லாவற்றிலும் வாழும் குடிஜனங்கள் அனுபவித்து வரும் சுதந்தரங்களைப் பூர்த்தியாய்ப் பாதுகாத்து, துரைத்தனத்தைச் சட்ட ஒழுங்குகளின்படி நடத்தி வருவதற்கே நான் சிரத்தையுடன் முயல்வேன். சுதந்தரத்தையும், நியாயத்தையும், ஸமாதானத்தையும், ஆதாரமாகக்கொண்டு ஸர்வஜன நியந்தாவாகிய கடவுளின் திருவருள் பெற்று ப்ரிடிஷ் ராஜ்யத்தின் பாக்கியத்தை ரக்ஷித்து வரக்கடவேன்."

இப்போது ஜார்ஜ் மஹாராஜா ராஜாங்கமென்னும் கப்பலின் முன்னணியத்தில நின்றுகொண்டிருக்கிறார். இவர் காலத்தில் இனி பெருத்த பிரதாபம் பொருந்திய செயல்கள் நடக்கவேண்டியிருக்கின்றன.

இவருடைய குணதியசங்களைப் பற்றி மிஸ்டர் ஸ்டெட் என்னும் பத்திராதிபர் பின்வருமாறு கூறுகிறார்:—

"மஹாராஜா யோக்கியர். மற்றவர்களுடன் தாம் நடத்தும் சகல விவகாரங்களிலும் நேர்மையாய் நடந்து கொள்பவர். அவருக்கு அபாரமான தீக்ஷண புத்தியாவது கண்டோர் பிரமிக்கும்படியான அபூர்வஞானவிசேஷமாவது இருப்பதாக நான் சொல்ல வரவில்லை. ஆனால் தாம் பொதுஜனங்களுக்குச் சேய்யவேண்டிய கடமைகளைச் சரியாய் உணர்ந்திருப்பதிலும், தம்மைப்படைத்த ஈசனை வினயபூர்வமாய்ச் சார்ந்திருப்பதிலும் இவரைவிட சிறந்த அரசன் இங்கிலாந்து தேசத்து சிம்மாசனத்தில் இதற்கு முன் எப்போதும் ஏறியது கிடையாதென்று நான் உறுதியாகச் சொல்வேன்."

இத்தகைய குணவிசேஷம் வாய்ந்த புருஷனையே நாம் இந்த சமயம் நமது மஹாராஜ சக்ரவர்த்தியென்று இறுமாப்புடன் போற்றும் பாக்கியம் பெற்றிருக்கிறோம்.

ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்கும் மத்தியில் அதிக ஒற்றுணர்ச்சி இருக்கவேண்டுமென்று நமது மஹாராஜா மிக்க வாக்சாதுரியத்துடன் பரிந்து பேசியிருக்கிறபடியால், இவர் அரசாட்சியில் அந்த உணர்ச்சி முதிர்ந்து இந்தியா தேசம் மற்ற தேசங்களினிடையில் உன்னத புதவியடையுமென்று இந்தியர்கள் ஆவலாய் எதிர்பார்த்திருக்கிறார்கள்.

# CORONATION ODE.

மாட்சிமை தங்கிய

ஜார்ஜ் சக்கரவர்த்தியின்

## முடிசூட்டுவைபவ வாழ்த்துப்பாட்டுகள்.

———(:o:)———

இராகம் :—“ மார்கழிமாதந் திருவாதிரைநாள் ” என்றமெட்டு.

**ஜய ஜய ஜார்ஜ் மகராஜ்,**

---

(1) தந்தையா யுயிர்க்குத் தரணியை யாண்டிடுந் தண்ணருள் எங்கள் ராஜ்
சிந்தைம கிழ்ந்திடச் செப்பிடு வோம்யாம் ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(2) தெள்ளமுதனையத் தித்திக்கும் நற்சுகம் தெவிட்டாதளிக்கும் ராஜ்
உள்ளம கிழ்ந்திட உரைத்திடுவோம் யாம் ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(3) இரவியைப் போலெங்கும் புகழொளி நிலவிடும் இன்னருள் செங்கோல் ராஜ்
பரவசம் பொங்கிடப் பகர்ந்திடுவோம்யாம் ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(4) துஷ்டரை நிக்ரஹி சிஷ்டரை ரட்சக தொல்சீர்ச் செங்கோல் ராஜ்
இஷ்டத்துடனே இயம்பிடுவோம்யாம் ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(5) முப்பது கோடியா மிந்திய உயிர்க்கு முதல்வன் ஆயிடும் ராஜ்
ஒப்பரும் ஒண்முடி உயர்டில் லியிற்தரி ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(6) சூரிய ஜோதி சோர்வடை யாதிரு மகிதலம் ஆண்டிடும் ராஜ்
நாரியர் திலகமாம் மேரியரசியோ டிலங்கிடும் ஜார்ஜ் மகராஜ்.

(7) வருஷிக்க மும்மழை வளநிலஞ் செழித்திட ஆண்டிடும் எங்கள் ராஜ்
கிருஷியுமோங்கிடக் கிளைத்திடக்குடிகளும் ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(8) எழுந்திடு மெங்களதிளநாகரிகம் என்றுந்தழைத்திட ராஜ்
ஒழுக்கமுங் கல்வியும் உயர்ந்து வளர்ந்திட ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(9) கனவர்த்தகமுங் கைத்தொழில்விர்த்தியுங் கடுகிவளர்ந்திட ராஜ்
ஜனத்திரளிந்தியர் ஸர்வசுகம்பெற ஜயஜய ஜார்ஜ் மகராஜ்.

(10) இழையிடை நங்கையர் எழிலுங்கற்பு மினிதாயிலங்கிட ராஜ்
“பிழைக்கும் வழி”யும் பெருமையரியோங்கிட ஜயஜய ஜார்ஜ மகராஜ்.

சு. அ. சு.

# A SONG OF PRAYER.

## தெய்வப்பிரார்த்தனை கீதம்,

BY Rao Sahib M. ABRAHAM PANDITHAR.

———(:o:)———

சிறப்புற்றோங்கும் பிரிட்டிஷ் இராஜ்யபாரந்தாங்கும் மாட்சிமைதங்கிய ஜியார்ஜ் ஐந்தாவது மன்னனும் அவரது பட்டமகிஷி மேரி இராணியவர்களும் இந்தியாவில் டில்லிமாநகரம் வந்து ஏகசக்ராதிபத்திய கிரீடதாரணம் பெறும் சமயத்தில் தமது திருவருள் கடாட்சிக்கத் தெய்வத்தைப் பிரார்த்திக்கும் இராஜகீதம்.

தீரசங்கராபரணம். ஏகதாளம்.

பல்லவி.

| | | | | |
|---|---|---|---|---|
| | ஸ்ரீ | மா | தே | வா |
| | திருவருள் | புரியஇத் | தருணமிங்கு | நீயும்வா. |

சரணங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | சிங்கக்கொடி | பெற்றிலங்கும் | எங்கள் ராஜ்ஜி | யம் |
| | சங்கைஜியார்ஜி | மன்னன்மகிஷி | மேரி அன்னை | யும் |
| | மங்களமாய் | மாலைசூடிச் | செங்கோல்கைக்கொண் | டு |
| | பங்கமின்றி | ஆண்டுவரப் | பட்டம்சூட்ட | வா. |
| 2 | வெற்றிவேந்த | னாகிவேந்தர் | வேந்தனுந்த | யை |
| | பெற்றுநீதி | இரக்கம்அன்பு | பொறுமைஉரி | மை |
| | உற்றுச்செங்கோல் | பெற்றுலகில் | ஒன்றுபோலெம் | மை |
| | முற்றுங்காக்கக் | கிருபைசெய்ய | வேண்டிக்கொள்கி | றோம். |
| 3 | மண்ணிற்செல்வம் | மேன்மைஆயுள் | மக்கட்பேறு | டன் |
| | விண்ணின்மணியைப் | போலிலங்கி | விளங்கும்பேரு | டன் |
| | கண்ணின்கரு | மணியைப்போல | காத்துச்சீரு | டன் |
| | எண்ணும்நன்மை | யாவுந்தர | இரங்கவேண்டி | னோம். |
| 4 | காரணனும் | கர்த்தனுந்தன் | கருணைபொங்க | வே |
| | மாரணஞ்செய் | சத்துருக்கள் | வர்மம்நீங்க | வே |
| | தோரணமோ | டெங்கும்வெற்றிக் | கொடியும்ஓங்க | வே |
| | பூரணாசீர் | வாதந்தந்து | புவியில்தாங்க | வா. |
| 5 | ராஜாஎன்றும் | வாழ்கவே! நீ | டூழிவாழ்க | வே! |
| | ராஜவிசு | வாசிகளும் | மற்றும்யாவ | ரும் |
| | பாசமோடு | ராஜகீதம் | பாடிவாழ்க | வே! |
| | தாசர்வேண்டும் | தருணம்அருள் | தந்துகாக்க | வா. |

(ம. ஏப்ரஹாம் பண்டிதர்.

## WHAT IS LIFE?

BY

P. T. SRINIVASA AIYANGAR, M. A. F. M. U.

## உயிர் என்றால் என்ன?

(எழுதியபடி பிரசுரிக்கப்பட்டிருக்கிறது).

---

உலகத்தில் இருக்கும் பொருள்கள் உயிருள்ளவை சிலவும் உயிரில்லாதவை சிலவும் என்று எல்லாருக்கும் தெரியும். உயிர் என்றால் என்ன? அதற்கு அடையாளம் என்ன? அது செய்யும் வேலை என்ன? என்று தீர விசாரிப்போம்.

வஸ்துக்கள் ஸ்தாவரம், ஜங்கமம், இந்த இரு வகை என்று சாதாரணமாய் சொல்வது உண்டு. ஸ்தாவரம் என்றால் அசையாப் பொருள். ஜங்கமம் என்றால் அசையும் பொருள். அசையாப் பொருள் உயிரில்லாதது என்றும் அசையும் பொருள் உயிருள்ளது என்றும் இதன் அர்த்தம். அதாவது உயிருள்ள பொருள் தானாய் அசையும் என்றும், உயிரில்லாதது வேறொரு பொருள் அதை தள்ளினால்தான் அசையும், ஓடும், என்றும், ஆகையால் தானாய் அசைதலே உயிருக்கு அடையாளம் என்றும் நினைத்து இந்த வார்த்தைகளை உபயோகப்படுத்துகிறோம். ஆனால் காற்று அடிக்கும்போது தானாகவே ஓடுகிறதே ஒழிய வேறே ஒரு பொருள் அதை ஓட்டவில்லை. காற்று உயிருள்ள வஸ்து அல்ல. ஆகையால் தானாய் அசைதல் உயிர் இருக்கிற வஸ்துவின் குணம் என்று நினைக்கிறது சரியல்ல.

உயிர் என்கிற சொல்லுக்கு முதலில் மூச்சு என்பது அர்த்தம். இன்னமும் நெட்டுயிர்ப்பு என்றால் நீண்ட மூச்சு என்னும் அர்த்தத்தில் உபயோகிக்கிறோம். ஆகையால் மூச்சு விடுதல் உயிரிருக்கிற வஸ்துக்களுக்கு அடையாளமாய் வைத்துக்கொள்ளலாம். மூச்சு என்றால் மூக்கு வழியாய் காற்று உள்ளே போவதும், திரும்பி வருவதுமேயாம். ஆனால் உயிருள்ள பொருள்கள் எல்லாம் மூக்கு வழியாய் மூச்சு விடுகிறதில்லை. காற்றையே உள் இழுத்து வெளிவிடுகிறது மில்லை. மீன்கள் நீரை உள் கொண்டு, வெளிவிடும். அந்த நீரில் காற்று கரைந்து, கலந்து இருக்கும். புழுக்களும் மரவகைகளும் * உடலெல்லாம், காற்றை உள் கொண்டு, வெளிவிடும். ஆகையால் மூச்சு விடுகிறது என்கிற்தை மூக்கினால் ஸ்வாஸம் விடுகிறது என்று அர்த்தம் பண்ணிக்கொள்ளாமல், எந்தவிதமாயாலும் காற்றை உண்டு, வெளிவிடுகிறது என்று அர்த்தம் பண்ணிக்கொண்டால், மூச்சு விடுதல் ப்ராணிகள் எல்லாவற்றுக்கும் உண்டானகுணம் என்று ஒப்புக்கொள்ளலாம்.

ம்ருகவகையில் முலையுள்ளவை, பறவை, முதலியவையின் உடல் உயிருள்ளவரையில் சுட்டுக்கொண்டு இருக்கும். இவை மூக்கோட்டை வழியாய் காற்றை உள்ளிழுக்கும். உள்ளே போகும் காற்று மூச்சுப்பையில் நிரம்பி, திரும்பி வெளியில் வரும். உள்ளே போகிறதும் காற்று, வெளியில் வருகிறதும் காற்று, ஆனாலும், இரண்டும் ஒன்றல்ல. உள்ளே போகும் காற்றில் ஆக்ஸிஜன் என்

---

* ஸமஸ்க்கிருதத்தில் உயிர் என்பதுக்கு ப்ராணம் என்று பேர். ப்ராணம் என்றாலும் மூச்சே, ப்ராணி என்றால் மூச்சு விடும் பொருள். ஆனால் வழக்கத்தில் உயிருள்ளவை எல்லாவற்றுக்கும் இந்த வார்த்தை உபயோகப்படுகிறது. ப்ராணிகள் இரண்டு ஜாதி. மரம், செடி, புல, பூண்டு, முதலியவை ஒரு ஜாதி. மனிதன், மற்றைய முலையுள்ள ஜந்துக்கள், பறவை, ஊர்வன, மீன்கள், புழு, முதலியன இன்னொரு ஜாதி. முதல் ஜாதியை மரவகை என்றும் இரண்டாவதை ம்ருகவகை என்றும் பேர்வைத்திருக்கிறேன். இவைகளை இங்கிலீஷில் வெஜிடபில், அநிமல் என்று சொல்வார்கள்.

னும் காற்றுவகை * ஜாஸ்தியாகவும் வெளியில் வருவதில் கார்பானிக் ஆஸித் என்னும் காற்றுவகை ஜாஸ்தியாகவும் இருக்கும். ஆக்ஸிஜன், கார்பானிக் ஆஸித், இந்த காற்றுவகைகளின் குணங்களை பற்றி வேறே ஆர்ட்டிக்கிலில் சொல்லுகிறேன். மூச்சுப்பையில் போகும் ஆக்ஸிஜன் மூச்சுப்பை பக்கத்தில் ஓடும் ரக்தத்தோடு கலக்கும். அந்த ரக்தத்திலிருந்து கார்பானிக் ஆஸித் மூச்சுப்பைக்குள் வந்து வெளியில் வரும் காற்றுடன் கலந்து வந்து விடும்.

மீன்களுக்கு உடல் குளிர்ந்திருக்கும். மீன் காற்றை உள் கொள்ளாது. வாயால் தண்ணீரை உண்டு, கழுத்திலிருக்கும் ஓட்டைகளால் வெளிவிடும். கழுத்தில், மனிதன் மூச்சுப்பையிலில் போலவே, மீன் ரக்தத்திலிருந்து கார்பானிக் ஆஸித் தண்ணீருக்கும், தண்ணீரில் கரைந்திருக்கும் ஆக்ஸிஜன் ரக்தத்துக்கும் போகும். ஆக்ஸிஜன் கரைந்திருக்காத தண்ணீரில் மீன் உயிருடன் இருக்காது. கிணற்று தண்ணீரைகாய்ச்சினால் அதிலிருக்கும் ஆக்ஸிஜன் ஓடிப்போம். அப்படிப்பட்ட நீரில் மீனை போட்டுவைத்திருந்தால் அது உடனே செத்துப்போம். சமுத்திரத்தில் இருக்கும் ம்ருகவகைகள் எல்லாம் மீன் அல்ல. திமிங்கிலம் மீன் அல்ல, மீனைப்போல் தண்ணீர்குடித்து ஆக்ஸிஜன் சம்பாதிக்காது. அப்போதைக்கப்போது, நீரின் வெளியில் வந்து மூச்சுவிட்டுப் போகும்.

* காற்றுவகை என்னும் வார்த்தையை காற்றைப்போல் கண்ணுக்குத் தெரியாமல் அடித்தால் உடம்புக்குத் தெரியும் வஸ்துக்குபோாக வைத்திருக்கிறேன்.

* புழுக்களுக்கு உடம்பு எல்லாம் மூக்கே, அவைதோல் நம்முடைய தோலைவிட மெலியது. ஆகையால் தோல் வழியாய் காற்றிலிருந்து ஆக்ஸிஜன் உள்ளே போகும். தோல் வழியாயே கார்பானிக் ஆஸித் வெளியில் வரும். மரவகைகளுக்கு இது மாதிரியே பட்டைகளிலும் இலைகளிலும் இருக்கும் ஓட்டைகள் வழியாய் ஆக்ஸிஜன் உள்ளே போய் கார்பானிக் ஆசித் வெளியில் வரும். இந்த மாதிரி ஆக்ஸிஜன் உள் கொண்டு கார்பானிக் ஆஸீத் வெளிவிடுவது உயிருக்கு குணம். ஆக்ஸிஜன் உயிருள்ள பொருள்களுக்கு உள்ளே போய் என்ன வேலை செய்யும், கார்பானிக் ஆஸித் என்னத்துக்கு வெளிக்குவரவேண்டும், மூச்சுவிடுவதை விட முக்கியமான வேறு வேலைகள் உயிரினால் ஆகுமா என்ற கேள்விகளுக்கு இன்னொரு ஆர்ட்டிகிலில் பதில் சொல்லுகிறேன்.

பி. தி. ஸ்ரீநிவாஸய்யங்கார்.

* சாதாரணமாய் பூச்சிகள் அதாவது 6 காலும் ரக்கைகளும் உண்டானவை காற்றையே உள்கொள்ளும். புழுக்கள் என்றால் ம்ருதுவான தோலுண்டானவை. பூமிமேல் ஊரும், பாம்புவகைகள் பூச்சியும் அல்ல; புழுவுமல்ல; மூக்காலேயே மூச்சுவிடும்.

---

## MIRRORS.

BY

M. C. S. ANANTAPADMANABHA RAO M. A. L.T.

## முகம்பார்க்கும் கண்ணாடிகள்.

ஸாதாரணமாய்ப் புழங்கும் கண்ணாடி ஸாமான்களிளெல்லாம், ஒவ்வொருவராலும் உபயோகிக்கப்படுவது முகம்பார்க்கும் கண்ணாடி. இவ்வகைக் கண்ணாடிகளுக்கு தமிழ் பாஷையில் புழக்கத்தில் தனிப்பெயர் ஒன்று இல்லாத போதிலும் வழக்கத்திலுள்ள “கண்

ணாடி' என்னும் பதத்தையே இவைகளுக்கு உபயோகித்து, 'க்ளாஸ்' என்பதை பொதுப் பெயராக இந்த வியாஸத்தில் உபயோகிக்கிறோம். 'தர்ப்பணம்' 'ஆதர்சனம்' என்னும் வார்த்தைகள் இவைகளைக் குறிக்குமாயினும் அவ்வார்த்தைகள் வழக்கத்தில் இல்லை. புதிதாக வழக்கத்திற்கு கொண்டுவர வேண்டியிருக்கிறது. கண்ணாடிகளின் வகைகளையும், அவைகளை எப்படிச் செய்கிறார்களென்பதையும், அவைகளை எப்படிக் காப்பாற்றிவைத்துக் கொள்ளலாம் என்பதையும் அவைகளில் விகார உருவங்களைக் காட்டுகிறவைகளை எப்படி தெரிந்தெடுத்து நீக்கிவிடலாம் என்பதையும் பற்றி விவரிப்போம்.

கண்ணாடிகளுக்கு முக்கியமாய் வேண்டியது மிகவும் வழவழப்பான ஸம பரப்பேயாம். ஒரு டம்ளரில் வைத்த ஜலத்தைப் பார்த்தால் நம்முடைய பிம்பம் தெரியும். ஜலத்தை அசைக்க மேற் பரப்பு மேடு பள்ளமாய் உருவத்தை காட்டுகிறது. நம் வீடுகளில் நன்றாய்த் தேய்த்து வைத்த பாத்திரங்களை எடுத்துப் பார்த்தால், அவைகளில் நம்முடைய உருவத்தைக் காண்கிறோம். அப்பாத்திரங்களை மிருதுவான மணல் சம்பந்தமில்லாத மண்ணினால் தேய்த்தால், மேற்பரப்பு அதிக ஸமமாயும் பளபளப்பாயும் வர நம் பிம்பம் அதிகத்தெளிவாக காணப்படுகிறதல்லவா? அவைகளை ஸாதாரண மண் சாம்பல் முதலியவற்றால் தேய்த்துக் கழுவினால் வெளிப்புறம் சொரசொரப்பாய் நம்முடைய உருவமும் தெளிவாய்த் தெரிகிறதில்லையே? இம்மாதிரியான பிரதிபிம்பிக்கும் குணத்தை எந்த உலோகப்பாத்திரத்திலும் எளிதில் உண்டாக்கலாம். ஆதலால் உலோகத்தகடுகளால் கண்ணாடிகள் செய்யலாமே என்பீர்கள். க்ளாஸாலாகிய கண்ணாடிகள் அந்நிய தேசங்களிலிருந்து இத்தேசத்திற்கு தாராளமாய் வருவதற்குமுன் உலோக கண்ணாடிகள் இத்தென்னிந்தியாவில் செய்து வந்தார்கள். இப்போதும் திருவாங்கூர் ஸமஸ்தானத்தில் சில இடங்களில் இக்கைத்தொழிலை பயிற்சி செய்து வருகிறார்கள். இக்காலத்தும் சில ஆசார சீலர்கள் வீட்டில் ஸ்னானம் பண்ணினபிறகு க்ளாஸால் செய்த கண்ணாடிகளை உபயோகிக்காமல், உலோகத்தால் செய்த கண்ணாடிகளைத்தான் உபயோகிக்கிறார்கள். இக்கண்ணாடிகளின் மேற்பரப்பை அஜாக்கிரதையினால் தேய்த்து விடுவதால் இவைகள் கெட்டுப்போவதாலும், க்ளாஸ கண்ணாடிகள் அனேக விசித்திரமான வேலைப்பாடுடனும் விலை ஸரஸத்துடனும் ஏராளமாய் கிடைப்பதாலும், இக்கைத்தொழில் அதிசீக்கிரத்தில் க்ஷீணித்து விட்டது. க்ளாஸ் கண்ணாடிகளைப்போல இரட்டை பிம்பம் காட்டாமல், உலோகக் கண்ணாடிகள் ஒரே பிம்பத்தைக் காட்டுவதால், இதையே இக்காலத்திலும் நக்ஷத்திரங்களை கவனித்து பார்ப்பதற்காக உபயோகிக்கும் சில விதமான தூரத்ருஷ்டி கண்ணாடிகளில் உபயோகித்துவருகிறார்கள்.

ஸாதாரணக் கண்ணாடிகள் ஸமமாக மெருகுவைத்த பக்கங்களையுடைய் தகடுபோன்ற எங்கும் ஒரே பருமனான கண்ணாடி பில்லைகளால் செய்யப்படுகின்றன. இப்பில்லைக்கு ஒரு பக்கத்தில் மிகவும் மெல்லிய ஒரு உலோகத்தகடு ஒட்டியிருக்கும். இப்படை மிகவும் மெல்லியதாதலால் நகத்தாலும் கீறிவிடலாம். கண்ணாடி வழிச் செல்லும் ரேகைகளெல்லாம் இப்படையின் மேல்பட்டு திரும்புகின்றன. இப்படையும் ஸமபரப்புள்ளதாகையால் நம் பிம்பம் தெளிவாய்த் தெரிகின்றது. பழைய மிரர்களில் இப்படை ஆங்காங்கு கெட்டுப் போவதால் நம் உருவம் ஒரே சீராய் எங்கும் தோன்றுவதில்லை. இம்மெல்லிய உலோகப்

படையை ஜாக்கிரதையாய் காப்பாற்றவேண்டியது அவசியமாதலால், அதன்மேல் சிவப்பு நிறமுள்ள ஒரு வர்ணப்பொடி மொத்தமாக பூசப்பட்டிருக்கிறது. கொஞ்சம் விலை அதிகமான பில்லைகளிலெல்லாம் இப்படை வெள்ளியாலானது. இப்படை அதிக நாள்பட நிற்கும். இன்னொரு விதமான விலை ஸரஸமான கண்ணாடிகளில் பாதரசமும் வெள்ளியும் சேர்ந்த படை க்ளாஸின்மேல் படிந்திருக்கிறது. இக்கண்ணாடிகள் அதிசீக்கிரத்தில் கெட்டுப்போகின்றன. நமக்கு வேண்டிய கண்ணாடித்துண்டை எண்ணெய்ச்சிக்கும் அழுக்கும்போக நன்றாய்க் கழுவி வெள்ளி திராவகம் ஸம்பந்தமான ஜலத்தில் வைக்க, மிகவும் மெல்லிய வெள்ளிப்படை க்ளாஸ் தகட்டின் மேல்படியும். இதை உடனே தொடாமல் சுத்த ஜலத்தில் கழுவிக் காயவைத்து அதன்மேல் சிவப்பு வர்ணம் தடவுகிறார்கள். நாம் எடுத்த கண்ணாடி ஸமமான பக்கங்களையுடையதல்லவானால் நம் முகம் விகாரமாயும் பூதாகாரமாயும் காணப்படும். க்ளாஸின் வழியாய்ச் செல்லும் வெளிச்சந்தான் பிரதிபிம்பித்து நமக்கு வருவதால், கண்ணாடியின் மேற்பரப்பும் களங்கமற்றதாயும் இருக்கவேண்டியது அவசியமல்லவா? ஆதலால் கண்ணாடிகளில் முலாத்தை மாத்திரமேயன்றி மேல்பரப்பையும் அதிக ஜாக்கிரதையுடன் காப்பாற்றவேண்டும். மேல் பக்கத்தை சொரசொரப்பான வேஷ்டி முதலிய வற்றால் தேய்த்தால் தெளிவான தோற்றம் நீங்கிகோடுகள் உள்ளதாகக்காணப்படும். உருவமும் மங்கலாகத் தோன்றும். ஆதலால் கண்ணாடியின்மேல்பாகத்தை அடிக்கடி தொடக்கூடாது. துடைக்கவும் கூடாது. துடைக்கவேண்டி நேரிடும்போது மிகவும் மிருதுவான மஸ்லின் முதலான துண்டுகளாலே மாத்திரம் தூசிகளைப்போக்க வேண்டுமே யொழிய ஸ்நானம் செய்வதற்கு உபயோகிக்கும் முண்டுகளால் துடைக்கவேகூடாது. ஈரத்துணியால் அடிக்கடி துடைக்கக்கூடாது. மேலும் கையில் வியர்வை எப்போதும் இருப்பதாலும், கண்ணாடியின்மேல் வியர்வை பட அவ்வியர்வை கண்ணாடியைமெல்ல தின்றுவிடுவதாலும், கண்ணாடியின் மேற்பரப்பு மங்கலாகி உபயோகப்படாமல் போகிறது. பெண்டுகள் கண்ணாடியின்மேல் நகை முதலானவைகளை ஸாதாரணமாய் வைப்பது வழக்கம். இதனாலும் கண்ணாடியின் மேற்பரப்புக் கெட்டுப்போகின்றது.

முகத்தை விகாரமாகவும் பூதாகாரமாகவும் காட்டும் குணம், ஸன்னத் தகடுகளால் செய்த கண்ணாடிகளில் உண்டு. ஆகையால், வாங்கும்போதே மொத்தமான பில்லைகளாலாகியவைகளைத் தெரிந்து எடுப்பது நல்லது. ஸன்னக் கண்ணாடிகளுக்குப் பின்புறம் அனேக ஸன்னக் கண்ணாடித்துண்டுகளை வைத்து மொத்தமான சட்டம் கட்டி, நல்ல கண்ணாடி யென்று ஏமாற்றி விற்றுவிடுகிறார்கள். இச்சூதை சுலபமாய்க் கண்டறியலாம். கண்ணாடியைக் கையில் எடுத்து நம்முடைய முகத்தை மாத்திரமன்றி கொஞ்சம் தூரத்திலுள்ள வீட்டுக் கூரைகள், வாயிற் படிகள் முதலானவைகளின் பிம்பத்தை கவனித்தால், அவைகளில் தோன்றும் கோடுகள் வளைந்திருப்பதாக காணப்பட்டால் கண்ணாடி உபயோகமில்லாததென்று தள்ளி விடவேண்டியதுதான். மேலும் நம் கைவிரலை பில்லையின்மேல் வைத்து அதன் பிம்பத்திற்கும் அதற்கும் இடையுள்ள தூரத்தை கவனிக்க, அது கால் அங்குலத்திற்குக் குறையாமல் காணப்பட்டால், நல்ல கண்ணாடி என்றே ஊகிக்கலாம். நல்ல கண்ணாடிகளில் கவனிக்கும்போது இரண்டு பிம்பங்கள் தோன்றும். ஒன்று தெளிவாகவும்

மற்றொன்று அதன் பக்கத்தில் மங்கலாகவும் தென்படும். மங்கலானது கண்ணாடியின் முன்புறத்தால் உண்டாகிறது. தெளிவானதுதான் பின்புறத்துள்ள உலோகப் படையினால் உண்டாவது.

இக்கண்ணாடியின் முன் பக்கமாக ஒரு விளக்கை வைத்து கண்ணாடியின் மேற்பரப்பின் பக்கத்தில் கண்ணைவைத்து விளக்கின் பிம்பங்களைப் பார்க்க, 5,6 உருவங்கள் தோன்றும். இவற்றின் காரணத்தை யோசித்துக் கண்டுகொள்ளுங்கள். கேலீடாஸ்கோப் என்று வெகு உருவதரிசனி என்றும் சொல்லப்பட்ட திருப்பிக்கொண்டே பார்க்கப்பார்க்க விதம் விதமான உருவங்களைக் காட்டும் அரை அணு விலையுள்ள குழாயை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதில் மூன்று கண்ணாடிச் சட்டங்கள் முக்கோண உருவமாக கட்டிஉள்ளே வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு ஓரத்தில் உடைந்த வர்ணக் கண்ணாடித் துண்டுகள் கிடக்கின்றன. இந்த முக்கோணத்தின் மையம் வழியாய் இந்த வர்ணத்துண்டுகளைப் பார்க்க, அவைகளும் அவற்றின் பிம்பங்களும் பலவித உருவங்களுடன் காணப்படுகின்றன. இதைப் பார்த்துக்கொண்டிருக்கும் குழந்தைகள் அளவில்லாச் சந்தோஷமடைகிறார்கள். வண்டி விளக்குகளுக்கு பின்புறம் அடுத்து உபயோகிக்கும் வட்டமான உருவமுடைய கண்ணாடிகள் ஸமபரப்புள்ளவையல்ல, குவிந்த பக்கங்களையுடையன. இதனால் விளக்கிலிருந்து கண்ணாடியின் மேல்படும் கிரணங்களெல்லாம் விளக்கின் பக்கமாகவே திரும்பி விளக்கின் முன்புறம்படும் வெளிச்சத்தை அதிகரிக்கின்றன. இவைகளில் பிம்பத்தைப் பார்த்தால், நம் முகம் பூதாகாரமாகவும், தூரத்திலுள்ளவைகளின் பிம்பம் சிறுத்தும் தலை கீழாகவும் வலமிடம் மாறியும் காணப்படும். அவைகளில் சூரிய கிரணங்கள் நேராய்ப் படும்படி பிடித்தால் மேல்படும் கிரணங்கள் குவிந்து ஓரிடத்தில் சூரிய பிம்பம் சிறுத்தும் அதிக உஷ்ண தீக்ஷணியத்துடனும் காணப்படும். அவ்விடத்தில் கருப்பான காகிதத் துண்டுகளை பிடிக்க அவை சீக்கிரம் தீப்பற்றும். மெழுகுவத்திஸ்தம்பங்களில், எரியும்போது ஜ்வாலையின் மேல் தலை கீழாக மற்றொரு ஜ்வாலை காணப்படுவதின் காரணமென்ன?

எம். வி. எஸ். அநந்தபத்மநாபராவ்

---

# MICA.

BY

T. C. V. RAMANA AIYAR.

## அப்ரகம்

இது பூமியிலிருந்து வெட்டி யெடுக்கப்பட்ட தாதுப் பொருள்களில் ஒன்று. இது பார்வைக்கு பளப்பளப்புள்ளதும், அதிக மெல்லிய தகடுபோல் பிளந்து எடுக்கக்கூடியதுமான பொருள். இது அந்நிய தேசங்களில் பல விடங்களில் பூமியிலிருந்து தோண்டியெடுக்கப்பட்டு லாந்தர்களுக்கு கண்ணாடியாக உபயோகிக்கப்பட்டு ஏராளமாய் இந்தியாவிற்கு வருகிறது. ஒரு அங்குலம் கனதியுள்ள துண்டை யெடுத்து தண்ணீரில் ஊறவைத்துப் பிளந்தால் சுமார் 100 தகடுகளாகப் பிரிக்கலாம். இது நீலகிரிமலையின் மேல் கூடலூருக்கு சமீபத்தில் ஏராளமாக எடுக்கப்பட்டு இங்கிலாண்டுக்கு அனுப்பப்படுகிறது.

ஸமீபத்தில் நான் கோயமுத்தூர் ஜில்லா பவானி தாலூக்காவில் பிரயாணம் செய்ய நேர்ந்த ஸமயத்தில் நேரில் கண்ட அனுபோகத்தில் கீழ்வருவனவற்றை "பிழைக்கும்

வழி" யைப்படிக்கும் நேயர்களுக்கு தெரிவிக்க எண்ணங்கொண்டு எழுதலானேன்.

ஈரோடு ரயில்ஸ்டேஷனை விட்டு ஒன்பது மைல் தூரத்திலுள்ள பவானி என்ற ஊரை யடைந்து, அங்கிருந்து அத்தாணி என்று அழைக்கப்படுகிற கிராமத்திற்குச்செல்லுகிற பாதையில் ஆப்பக்கூடல் என்ற ஒரு சிறிய கிராமமும் அதற்கு ஸமீபத்தில் பாதையின் பேரில் ஒரு சிறிய ஏரியுமிருக்கின்றன. இந்த ஏரிக்கு ஸமீபத்தில் அப்ரகம் விளையும்படியான பூமிகள் அதிகமாயிருக்கின்றன. நான் இப்பாதையில் செல்லும்பொழுது அதிக மழையாகஇருந்தபடியால் பாதைகளில் அநேக இடங்களில், தண்ணீர், பாதையை அறுத்தும் அடித்துக்கொண்டு போயுமிருந்தது. மேற்சொன்ன ஏரிக்கு ஸமீபத்தில் பாதை அதிகமாக சேதப்பட்டிருந்தபடியால் சில ஆட்கள் பாதையின் இருபுறத்திலுமுள்ள கால்வாய்களைத் தோண்டி பாதையின் பேரில் மண்போட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படி போடப்பட்ட மண்ணில் ஏராளமான அப்ரக துணுக்குகள் இருப்பதைக்கண்டு அவைகளில் சிலவற்றை எடுத்துப் பார்த்தேன். சில துண்டுகள் அரையங்குலம் முதல் ஒரு அங்குலம் வரை கனமுள்ளனவாயும் ஐந்து ஆறு அங்குலம் நீளமும் அகலமு முள்ளனவாயுமிருந்தன. சிலவற்றை விரல் நகத்தால் கீறிப்பிளக்கும் பொழுது பல மெல்லிய தகடுகளாக பிரிக்கக் கூடியவைகளாயுமிருந்தன. இவைகளைப்பற்றி விசாரிக்கையில் இந்த ஏரியின் உட்பாகத்தில் பல இடங்களிலும், ஏரியின் வெளிப்புறத்திலுள்ள சிற்சில பூமிகளிலும் இம்மாதிரி அப்ரகச் சுரங்கங்கள் ஏராளமாயிருப்பதாகவும், ஜாக்கிரதையாக வெட்டி யெடுத்தால் அதிக நீளமும் அகலமும் கொண்ட பலகைகளாகத்தோண்டியெடுக்கலாமென்றும் சொன்னார்கள். தொழில் முயற்சியில் அக்கரையுள்ள அபிமானிகள் உடனே இந்த இடத்தை பார்வையிட்டு இந்த தாதுப்பொருளை யெடுத்து பிறதேசங்களுக்கு அனுப்பியாவது அல்லது இவ்விடத்திலேயே வேண்டிய வேலைகளுக்கு உபயோகப் படுத்தியாவது நல்ல லாபத்தை யடையலாம். கண்ணாடி செய்கிறவர்களுக்கு இந்த தாதுப்பொருளும் கூட்டுப் பொருளாக உபயோகப்படுகிறதென்று சிலர் சொல்லுகிறார்கள். அது எவ்வளவு உண்மையோ எனக்குத் தெரியாது.

தவிர இந்த தாலூக்காவில் பூமியானது பல இடங்களில் பலவிதமான கற்களையுடையதாயிருக்கிறது. சில இடத்தில் வெங்கற் செங்கல் என்ற கற்கள் ஏராளமாயிருக்கின்றன. சில கற்களை எடுத்துப்பார்த்தால் வயிரமோ, புஷ்பராகமோ, ஸ்படிகமோ என்று கருதும்படியாக அவ்வளவு ப்ரகாசமும், பள பளப்பும் நயமுமுள்ளதாய் இருக்கின்றன. சில இடங்களில் இருப்புக்கற்கள் கருத்த நிறமுள்ளனவாயும், ஸாதாரண கற்களைவிட இருமடங்கு கனமுள்ளனவாயுமிருக்கின்றன. சிறிது காலத்திற்குமுந்தி இத்தாலூக்காவில் துருஞ்சிக்கல் என்ற ஒருவகைக்கற்களை ஒருசேட் தோண்டியெடுத்து பம்பாய்க்கு அனுப்பிக்கொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன். இம்மாதிரி பூமிக்கடியில் புதைந்து கிடக்கிற தாதுப்பொருள்கள் பல இடங்களில் அநேகமிருந்தபோதிலும், கோயமுத்தூர் ஜில்லா பவானி, சத்திய மங்கலம் தாலூக்காக்களிலிருப்பதுபோல் அவ்வளவு அதிகமாயிராதென்று நினைக்கின்றேன்.

டி. வி. வி. ரமண்ய்யர்.

## SELECTIONS.

## விசேஷத்திரட்டு.

### COMPETITION AND COMBINATION.

### போட்டியும் ஐக்கியமும்.

ஒரு வேலையில் அல்லது தொழிலில் அமர்ந்திருக்கும் எல்லோரும் சமமாக இருக்கலாம் என்பது அசாத்தியம். ஏனென்றால் இரண்டு வேலைக்காரர்கள் ஒரே நேரத்தில் புறப்பட்டு ஒரேவிதமான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு ஒரே வேலை செய்யத் தொடங்கினாலும் மறுநாள் பார்த்தால் கொஞ்சம் வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். ஒவ்வொருவனும் மற்றவனைவிட நேர்த்தியாகச் செய்ய யத்தனிக்கிறான். பந்தயத்தில் ஒரே இடத்திலிருந்து புறப்பட்ட எல்லோரும் எப்படி ஒவ்வொருவராய் முந்திக்கொள்ளுகிறார்களோ அவ்விதமாகச் சுறுசுறுப்புள்ளவன் சோம்பேறியை முந்துகிறான். கஷ்டப்படுகிறவன் சுகத்தை அபேக்ஷிக்கிறவனை முந்துகிறான். புத்தியைக்கொண்டு வேலை செய்கிறவன் கையால் வேலை செய்கிறவனைத் தோற்கடிக்கிறான்.

அற்பமான வேலை முதற்கொண்டு, பெரிய வேலைவரைக்கும் போட்டியில்லாமல் இராது. ஒரே தொழிலில் ஏற்பட்டிருக்கிறவர்களுக்குள்தான் அது ஜாஸ்தியா யிருக்கும். முதல் இரண்டு மூன்று பேர்களுக்குள்ளும் கடைசி இரண்டு மூன்று பேர்களுக்குள்ளும் போட்டி மிகவும் ஜாஸ்தியாயிருக்கும். மருந்துக்கடைக்காரனுக்கும் காசாப்புக்கடைக்காரனுக்கும் எவ்விதமான போட்டி யிருப்பதற்கும் காரணமில்லை. ஏற்கனவே சொன்னமாதிரி ஒரே தொழில் செய்கிறவர்களுக்குள்தான் போட்டி யிருக்கும்.

விறகு வெட்டி விறகைக் கொடுத்து அப்பம் சுடுகிறவர்களிடமிருந்து அப்பம் வாங்குகிறவரையில் போட்டியில்லை. விறகு வெட்டுகிறவர்கள் இரண்டுபேர்கள் ஏற்பட்டவுடனே, போட்டி ஆரம்பிக்கிறது ஒருவிதத்திலல்ல; பல விதங்களிலும் ஏற்படுகிறது. ஒருவன் மற்றவனைவிட ஜாஸ்தி கட்டையைக் கொடுக்கச் சம்மதிக்கிறான், அல்லது கட்டையை எவ்விடத்தில் கொண்டுவந்து சேர்ப்பிக்கச் சொல்லுகிறோமோ அவ்விடத்தில் கொண்டு வந்து சேர்ப்பிக்க ஒப்புக்கொள்ளுகிறான், அல்லது கட்டைகளை மெல்லிய துண்டுகளாக வெட்டிக்கொடுக்க ஒப்புக்கொள்ளுகிறான், இவ்விதமாக ஒருவன் மற்றவனைவிடத் தன்னுடைய வயிற்றுக்கு வேண்டிய ஆகாராதிகளை வாங்கத்தன்னால் கூடிய புத்திச் சாதுரியத்தை உபயோகிக்கிறான்.

ஆதியில் கைத்தொழிலில் போட்டியாக ஆரம்பித்து புத்தியின் போட்டியாக வந்து முடிகிறது. நாகரிகம் அதிகரிக்க, அதிகரிக்க ஆசையினால் செய்கிற வேலையைவிடப் புத்தி, சரீரப்பிரயத்தினத்தினால் செய்கிற வேலைக்கு மதிப்பு ஜாஸ்தியாகிறது. தொழில்களெல்லாம் புத்தியின் போட்டியாக முடிகிறது. விருத்தியடைவதற்குப் போட்டி அத்தியாவசியம். போட்டியில்லாமல் போனால் வியாபாரம் விருத்தியடைகிறதில்லை. போட்டிக்குத் தடங்கல்செய்கிறது இயற்கைக்கு விரோதமாயிருக்கிறது. டச்சுக்காரர்கள் வாசனை சாமான்களைத் தங்களுடைய தீவுகளில் தவிர மற்ற இடங்களில் பயிராக்கப்படாது என்று யத்தனம் செய்தார்கள். மற்றவர்கள் போட்டிக்கு வரக்கூடாது என்ற எண்ணத்தை இவர்கள் அடைந்தார்கள். இது இயற்கைக்கு ஏற்குமா? ஏற்காது. ஆகையினால் பட்சிகள் இந்த வாசனைச் சாமான்களைச் சாப்பிட்டு மற்றத் தேசங்

களில் போய்க் கொட்டைகளைப் போடுவதி ஞல் அந்தத் தேசங்களில் வாசனைத் திரவியங் கள் பயிராவதற்கு ஆரம்பித்தன.

ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு ஜாதியார் உயர்ந்த பதவியில் இருந்தார்களென்று நாம் சரித்திரத்தில் வாசித்திருக்கிருேம். இன்ன இன்ன காலத்தில் இன்ன இன்ன ஜாதியார் க்ஷீணதசையை அடைந்தார்களென்றும் இன்ன இன்ன ஜாதியார் உயர்ந்து விட்டார் களென்றும் சொல்லுகிருேம். பின்னல் சொன்னது நிஜமா யிருந்தாலும் இருக்க லாம். முதலில் சொன்னது நிஜமா யிருக்க வேண்டியது அவசியமில்லை. ஒரு வியா பாரத்தில் ஒரு ஜாதியார் முந்தியிருக்கிருர் கள் என்பது மற்றவர்களை முந்துவதற்குப் பிரயத்தினம் செய்யும்படிச் செய்கிறது. இதனுல் முதல் ஜாதியார் க்ஷீணித்து விட் டார்கள் என்று அர்த்தமல்ல. அவர்கள் ஒரு காலத்தில் உன்னதமான பதவியில் இருந்தார் கள். பிறகு விருத்தியடைய யத்தனிக்க வில்லை யகையால் மற்றவர்கள் அவர்களை முந்தி விட்டார்கள். இதுவரையில் போட்டி அவசியமென்றும் ஒரே வியாபாரம் அல்லது தொழில் செய்கிறவர்களுக்குள் போட்டி ஜாஸ்தியாக இருக்குமென்றும் சொன்னேம்.

இனி, பல தேசத்தார்களுக்குள் ஏற்படும் போட்டியைப் பற்றிப் பேசுவோம். எப்படி ஒரே தொழிலில் அமர்ந்திருக்கும் ஜனங் களுக்குள் போட்டி ஏற்படுகிறதோ, அதே மாதிரியாக ஒரே தொழில் செய்கிற பல ஜாதி யார்களுக்குள்ளும் போட்டி ஏற்படுகிறது. உதாரணமாக, பருத்திவிளைவிக்கும் ஜாதியார் களுக்குள் போட்டி ஏற்படும். சுரங்கங்களி லிருந்து உலோகங்களை வெட்டியெடுக்கிற ஜாதியார்களுக்குள் போட்டி ஏற்படும். உள் ளூரில் ஒருவர்க்கொருவர்போட்டி செய்தபோ திலும் வெளித்தேசத்தாரோடு போட்டி போடும் போது எல்லோரும் ஒன்ருகச் சேர் ந்து கொள்ளுகிருேம். எப்படி ஒரு பட்டாள த்திலுள்ள சிப்பாயிக்கு அவன் பிரதிதினம் செய்கிற தேகப்பயிற்சியும் ஆயுதப்பயிற்சியும் வெளியூராரோடு சண்டை போட உதவுகின்ற னவோ, அதேமாதிரியாக உள்ளூர் வர்த்தகம் வெளி வர்த்தகத்திற்குத் தயார் செய்கின்றது.

சில சமயங்களில் எதிர் பாராத சில சம்பவ ங்கள் ஒரு ஜாதியாரை முன்னுக்குக் கொண்டு வருகின்றன. பத்தொன்பதாவது நூற்ருண் டின் ஆரம்பத்தில் ஐரோப்பாக் கண்ட முழு வதும் சண்டையும் சச்சரவுமாக இருந்தது. இங்கிலாந்து மாத்திரம் இந்த சச்சரவில் அகப் படாமலிருந்ததினுல், மற்ற தேசத்தார்கள் தங்களுக்கு வேண்டிய சாமான்களை இங்கிலாந் தினிடத்திலிருந்து வாங்கும்படி நேர்ந்தது. இவ்விதமாக இங்கிலாந்து முன்னுக்கு வந்து விட்டது. தேவை அதிகரிக்க அதிகரிக்க வாட், ஸ்டீபென்ஸன், பெஸ்மர் ஆர்க்ரைட், போன்ற பல புத்திமான்கள் உற்பவித் தார்கள். புதிதுபுதிதான யுக்திகள் கண்டு பிடித்தார்கள். கடைசியாக ரயிலும் நீரா விக்கப்பலும் அனேக விதமான யந்திரங் களும் காந்த தந்தியும் கண்டு பிடித்தார்கள். இதனுல் இங்கிலாந்து இவ்விதமான மேலான பதவியில் இருந்து கொண்டிருந்தது. இதர தேசத்தார்கள் இங்கிலாந்து சாப்பிட்டு மிகுந் ததைச்சாப்பிடச் சம்மதப்பட்டுச் சும்மா இருந்திருக்கும் பட்சத்தில் இங்கிலாந்து மேலான பதவியிலேயே இருந்திருக்கும். இங்கிலாந்து கொஞ்சம் ஜயமடையவே, யத் தனம் செய்வதை நிறுத்திவிட்டது. வியாபாரி களைத் தேடி வியாபாரம் செய்கிறதுபோக, இங்கிலீஷ்காரர்கள் உட்கார்ந்த இடத்தில் வியாபாரம் செய்ய ஆரம்பித்தார்கள்.

மற்ற ஜாதியார்கள் கண்ணை மூடிக்கொண்டு இங்கிலாந்து கொடுத்ததை வாங்க ஒப்புக் கொள்ளவில்லை. தங்களுடைய சண்டைகள் முடிந்தவுடனே முயற்சி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இங்கிலாந்தினுடைய உன்னத மான பதவியைப் பார்த்தார்கள். கப்பல் வியாபாரத்தில் இங்கிலாந்தோடு போட்டி போட முடியாதென்றும் தெரிந்து கொண் டார்கள். ஆனால் அவர்கள் உபயோகிக் கும் யந்திரங்களை வாங்கி வேலை செய்ய ஆரம்பித்தார்கள். தங்களுடைய யுக்திபுத்தி யினால் மேலான யந்திரங்களையும் கண்டு பிடித் தார்கள். ஒரு பிரஞ்சுக்காரர் ஜாக்கார்ட் லூம் என்னும் நெசவு யந்திரத்தைக் கண்டு பிடித் தார். ஆப்பர்ட் என்பவர் இறைச்சி கெடாம லிருக்கும் யுக்தியைக் கண்டுபிடித்தார். ஜெர் மனியர்கள் ரசாயன சாஸ்திரத்தின் உபயோ கத்தால் அநேகவிதமான தொழில்களைக் கண்டு பிடித்தார்கள். ஆகையால் இங்கிலீஷ் காரர்கள் தங்களுடைய புத்தியைக்கொண்டு மேலுக்குமேல் யுக்தி கண்டுபிடித்தாலொழிய மற்ற ஜாதியாருக்குப் பின்னடங்க வேண்டிய தாய் விடும். இங்கிலீஷ்காரர்களுக்கு தைரி யம் அதிகமாக இருக்கிற தென்றாலும் அவர் கள் பிரயாணம் செய்வதினால் அநேக பிர யோசனங்கள் இருக்கின்றன வென்றாலும் வேலைசெய்யவேண்டும். மேலுக்குமேல் கற் றுக்கொள்ள முயலவேண்டும். இதுவரையில் கைகளினால் செய்துகொண்டிருந்த வேலைக ளெல்லாம் இப்பொழுது யந்திரங்களினால் செய்யப்பட்டு வருவதை பார்த்தால், இன் னும் இருக்க இருக்க என்ன என்ன விநோதங்கள் ஏற்படுமோ வென்று ஆச் சரியப்படத்தக்கதா யிருக்கிறது. காற்றி னால் செலுத்தப்பட்டுப்போய்க் கொண் டிருந்த கப்பல்களுக்குப் பதிலாக இப்பொ ழுது மணிக்கணக்காய்ப் போகக்கூடிய நீரா விக் கப்பல்கள் உபயோகப்பட்டு வருகின்றன. நீராவிக் கப்பல்களுக்குக் கட்டையும் முன் போல ஜாஸ்தி தேவையில்லை. கொஞ்ச காலத்திற்கு முன் அட்லாண்டிக் மகா சமுத் திரத்தைக் கடந்து 700 அல்லது 800 டன் சாமான்களைக் கொண்டுபோக 1400 அல்லது 1500 டன் கரி தேவையாயிருந்தது. இப் பொழுதோ வென்றால், மூவாயிரம் டன் சாமான் கொண்டுபோக முந்நூறு டன் கரி யிருந்தால் போதும். கட்டை குறைவாகக் குறைவாக வேலைக்காரர்களும் குறைவாயிருந் தால் போதும். இவ்விதமாகச் செலவு குறை கிறது. ஆனால் மொத்தத்தில் கப்பல்கள் அதிகமாகி விட்டதினால் அனேகம் ஜனங்க ளுக்கு வேலை கிடைக்கிறது.

புத்தி சாதுரியத்தினால் கரியோடு கிடைக் கிற கோல்ட்டார் (தார்) என்னும் ஒரு உப யோகமில்லாத வஸ்துவுக்கு ஏராளமான மதிப்பு உண்டாகி விட்டது. உலோக சாஸ் திரம் படித்தவர்கள் இதிலிருந்து ஒருவித மான விலையுயர்ந்த வர்ணத்தை எடுக்கிறார் கள். சாஸ்திர வித்தையில் தேர்ந்தவர்களென் றும் மிகவும் புத்திசாலிகளென்றும் பேர்எடுக்க ஒவ்வொரு இங்கிலீஷ்காரனும் முயல வேண் டும். அப்படிப் பேர் பெற்றிருக்கிறவர்களு டைய புத்தியையும் ஊக்கத்தையும் கைக் கொள்ளவேண்டும் ஒவ்வொருவரும் ஏதாகி லும் ஒரு வியாபாரம் அல்லது தொழில் செய்யக் கூடும். ஆனால் ஏற்ற வியாபாரத் தைக் கண்டு பிடிப்பது தான் கஷ்டம். பயிர்ச் செலவில் கூட முன்னிருந்ததை விட அனேக விதமான சீர்திருத்தங்கள் ஏற்பட்டிருக்கின் றன. குடியானவன் தன் கையாலேயே உழுகிறதை விட்டு விட்டு யந்திர சாதனங்களை உபயோகிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

இவ்விதமாக ஒரு ஆங்கிலேயர், பிரிடிஷ் காரருக்கே புத்திமதி கூறுகிறாரென்றால், நம் இந்தியா விஷயத்திலும் இந்தியர் விஷயத்தி லும் எவ்வளவு புத்திமதி கூறினாலும் அப் படிக் கூறுவது மிகையாகுமோ?

சுதேசமித்திரனில் வைசியன்.

## REMITTANCE OF LAND REVENUE BY MONEY ORDER.

## மணியாடர் மூலமாய் நிலத்தீர்வை யனுப்புவது.

---

[1905-௵ ஜ-ஆலைமீ 28உயுள்ள போர்டு புரொசீடிங்ஸ் ந. 164—லா. ரி.]

இதனால் அறிவிப்பது யாதெனில், இனி மேல் கிராமாதிகாரிகளிடம் ரொக்கமாய் செலுத்துவதற்குப் பதிலாக போஸ்டாபீஸ் மணியாடர் மூலமாய் கிஸ்தி செலுத்த கவர்ன் மெண்டார் ரயத்துகளுக்கு அனுமதி கொடுக் கிறார்கள்.

2. ரெவினியூ மணியார்டர்கள் முக்கிய மாய் கிராமத்தில் குடியில்லாத பட்டாதார் களும் மற்றவர்களும் தங்களுக்குச் சொந்த மான அல்லது பாத்தியமுள்ள நிலங்களின் கிஸ்தியை சரியான காலத்தில் செலுத்தும்படி அவர்களுடைய நன்மைக்கென்று உத்தேசிக் கப்பட்டிருக்கிறது. நிலத்தீர்வை, செஸ், நில சம்பந்தமாய் செல்லாகவேண்டிய, அல்லது வழக்கமாய் நிலத்தீர்வையோடு செலுத்த வேண்டிய மற்ற பாபத்துகள் இவைகளுக்கு மட்டும் அவைகளை உபயோகிக்கலாமே யொழிய வேறெந்த காரியத்திற்கும் உபயோ கிக்கக்கூடாது.

3. ஒரே கிராமத்தில் ஒரு ரயத்துக்குச் சொந்தமான அல்லது பாத்தியமுள்ள நிலங் களுக்கு வெவ்வேறு பட்டா ஏற்பட்டிருந்தால் அவன் எல்லா பட்டாவுக்குமாகச் சேர்த்து ஒரே மணி ஆர்டரில் கிஸ்தித் துகையை அனுப்பிவிடலாம். ஆனால் ஒவ்வொரு பட்டா வுக்கும் இவ்வளவிவ்வளவென்பதாக தனித் தனியே குறிக்கவேண்டியது.

4. இம்முறையை அனுசரிப்பது ரயத்தி னுடைய இஷ்டத்தைப் பொறுத்ததென்றும் அவனுக்கு இஷ்டமிருந்தாலல்லது இம்மாதிரி தான் பணம் செலுத்த வேண்டுமென்பதாக யாதொரு கட்டாயமுமில்லை யென்றும் செவ் வையாய் அறியவேண்டியது.

5. ரெவினியூ மணியார்டர் பாரம் (Form) வெள்ளைக் காகிதத்தில் கறுப்பு மசியால் அச் சிடப்பட்டிருக்கிறது. அது வழக்கத்திலுள்ள உள்நாட்டு மணி ஆர்டர் பாரத்திற்கு ஏறக் குறைய இருமடங்கு பெரிது. அது மூன்று பாகங்களாக பிரிக்கப்பட்டிருக்கிறது.

A. மணி ஆர்டர்.

B. இருசால் விபரமடங்கிய மிமோரண் டம் (Memorandum).

C. வரவு ரசீது (Acknowledgment).

A. பாகம் வழக்கத்திலுள்ள உள்நாட்டு மணி ஆர்டர் பாரத்தை அநேகமாய் ஒத்திருப் பதால் அதைப்பற்றி விவரமாய் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. மேல்பாகத்தை போஸ்டாபீசுக்காரரும் கீழ்பாகத்தை பணம் அனுப்புகிறவரும் பூர்த்தி செய்யவேண்டி யது.

பணமனுப்பு விவரங்களை பதிவு செய்வதற் காக B. பாகத்தில் தலைப்பெயர்கள் (Headings) அமைக்கப்பட்டிருக்கின்றன. கிராம மணி யக்காரன், தாசில்தார் இவர்கள் தெரிந்து கொள்ளும் பொருட்டு அவைகளை பணமனுப் புகிறவர் பூர்த்திசெய்யவேண்டியது.

C. பாகம் ரெவினியூ மணி ஆர்டர் வந்து சேர்ந்ததற்கு ரசீது.

அது கிராம மணியக்காரனால் கையெழுத்து செய்யப்பட்டுபோஸ்டாபீசு மூலமாய் பணம் அனுப்பினவருக்கு திருப்பி அனுப்பப்படும். இதையும் பணம் அனுப்புகிறவரே பூர்த்தி செய்யவேண்டியது. ஒரு ரெவினியூ மணி ஆர்டரில் யாதொரு திருத்தமும் செய்யக்

கூடாது. அப்படிக்கு திருத்தங்களோடு கூடிய ஒரு பாரத்தை பணம் அனுப்புகிறவர் கொடுத்தால் அவரை புதிதாய் வேறொரு பாரம் பூர்த்திசெய்யும்படி கேட்கவேண்டியது.

6. ரெவினுயூ மணி ஆர்டர் பாரங்களை ரயத்துகளுக்குள் தாராளமாய் பரவச்செய்யவேண்டியது. இந்த பாரங்கள் ரயத்துக்களுக்கு கிடைக்கிற விஷயத்தில் யாதொரு விதமான தடையுமிருக்கக்கூடாது. ரெவினியூ மணி ஆர்டர் பாரங்களில் போதுமான சப்ளை ஒவ்வொரு போஸ்டாபீசுலும் எப்போதுமிருக்கும்.

7. ஒரு மணி ஆர்டர் துகையில் பைசாக்களை (அணுவினுடைய பின்னங்களை) சேர்க்கக் கூடாது என்கிற ஒழுங்கு ரெவினியூ மணி ஆர்டர்களுக்கு ஒப்பிதமில்லை. இவைகளில் (ரெவினியூ மணி ஆர்டர்களில், ஒரு பைசாவிற்கு குறையாத எந்த அணுவினுடைய பின்னத்தையும் சேர்க்கலாம்.

8. மணி ஆர்டர் எந்த போஸ்டாபீசிலிருந்து புறப்படுகிறதோ அந்த போஸ்டாபீஸ் உத்தியோகஸ்தர் பணம் அனுப்புகிறவருக்கு பதிவு செய்யும் விஷயத்தில் வேண்டிய ஒத்தாசை செய்யவேண்டியது. அவசியமேற்பட்டால் அவருக்காகத்தானே தன் கையினுல் ரெவினியூ மணி ஆர்டர் பாரத்தில் பதிவுகள் செய்யவேண்டியது. ஆனுல் இந்த உபகாரத்திற்காக எந்த போஸ்டல் டிபார்ட்மெண்டு உத்தியோகஸ்தனும் பணமாவது அல்லது வேறு எவ்வித வெகுமானமாவது நேராயாவது வேறெந்த மார்க்கமாயாவது கேட்கக் கூடாது. கொடுத்தாலும் வாங்கக்கூடாது. இந்த கட்டளையை உல்லங்கனம் செய்கிற உத்தியோகஸ்தன் தன் வேலையிலிருந்து நீக்கப்படுவதுடன் சட்டப்படிக்கு ஏற்படும் இன்னும் மற்ற தண்டனைகளுக்கும் அவன் பாத்திரனுவான்.

9. ரெவினியூ மணி ஆர்டர்கள் அந்தந்த இடத்து அனுஷ்டானத்திற்குத் தக்கபடி போஸ்டுமாஸ்டரினுலோ, போஸ்டுமானினுலோ, அல்லது கிராம போஸ்டுமானினுலோ, பணமில்லாமற்படிக்கு கிராம மணியக்காரனுக்கு கொடுக்கப்படும். மணியகாரன் ஒவ்வொரு மணி ஆர்டரிலும் மணி ஆர்டர் A-பாகத்தில் குறிக்கப்பட்ட துகையானது பணமனுப்பு விவரமடங்கிய மிமோரண்டத்திலும் (B-பாகத்திலும்) வரவு ரசீதிலும் (C-பாகத்திலும்) குறிக்கப்பட்ட துகையோடு ஒத்திருக்கிறதாவென்பதாக சரிபார்த்துக்கொள்ள வேண்டும். வித்தியாசம் ஒன்றும் இல்லாமலிருந்தால் அவன் ஒவ்வொரு ரெவினியூ மணி ஆர்டரின் வரவு ரசீது பாகத்தில் (சி-பாகத்தில்) கையெழுத்து செய்து அதை மாத்திரம் கிழித்து மணி ஆர்டரைக்கொடுத்த போஸ்டாபீஸ் உத்தியோகஸ்தனிடத்தில் கொடுத்து விடவேண்டியது. பிறகு மணியகாரன் தான் பெற்றுக்கொண்ட ஒவ்வொருரெவினியூ மணி ஆர்டருக்கும் போஸ்டாபீஸ் உத்தியோகஸ்தனுல் தன்னிடத்தில் ரெவினியூ மணி ஆர்டர்களோடு சேர்த்துக்கொடுக்கப்பட்ட போஸ்டுமான் புஸ்தகத்திலாவது, அல்லது வில்லேஜ் போஸ்டுமான் ரிஜிஸ்டரிலாவது வரவு வைத்துக்கொடுக்கவேண்டியது. மணியகாரன் ஒவ்வொரு ரெவினியூ மணி ஆர்டரின் வரவு ரசீது பாகத்தைக்கிழித்து போஸ்டாபீஸ் உத்தியோகஸ்தனிடத்தில் கொடுத்துவிட்டு அவனுடைய புஸ்தகத்தில் வரவுவைத்து கொடுத்தால பிறகு, ஷை உத்தியோகஸ்தனை உடனே அனுப்பிவைக்கவேண்டியது. மணியக்காரன் போஸ்டாபீஸ் உத்தியோகஸ்தனை எந்த முகாந்திரத்தைக்கொண்டும் காக்க்வைக்கக்கூடாது.

10. ஒரு ரெவினியூ மணி ஆர்டரின் பண மனுப்பு விவரமடங்கிய மிமோரண்டமாவது (B-பாகமாவது) அல்லது வரவு ரசீது பாக மாவது (C-பாகமாவது) பணமனுப்புபவரால் முழுவதும் பூர்த்திசெய்யப் படாமலிருந்தா லும், அல்லது பணமனுப்பு விவரமடங்கிய மிமோரண்டத்தில் (B-பாகத்தில்) பணமனுப் புபவர் கையெழுத்து செய்யாமல் விட்டிருந்த போதிலும் மணியகாரன் அந்த ரெவினியூ மணி ஆர்டரை வரவு வைக்காமல் போஸ்டா பீஸ் உத்தியோகஸ்தனிடத்தில் திரும்ப கொடுத்து விடவேண்டியது. இப்பேர்க்கொத்த மணி ஆர்டர்களில் விட்டுப் போனவைகளை பதிவு செய்து திரும்ப அனுப்பும்படியாய் அவைகளை ஒரு போஸ்டல் செர்விஸ் ரிஜிஸ் டர்டு கவரில் போட்டு முதல் முதல் எந்த ஆபீசிலிருந்து அவைகள் அனுப்பப்பட்ட னவோ அதே ஆபீசுக்கு திரும்பி அனுப்பி விடவேண்டியது.

11. மணியகாரன் பிறகு ஒவ்வொரு ரெவி னியூ மணி ஆர்டர் துகையையும் (அத்துகை கடுதாசியில்தானிருக்கிறது. அதற்காக அவன் போஸ்டாபீஸ் உத்தியோகஸ்தனுக்கு ரசீதும் கொடுத்திருக்கிறான்.) எல்லா விஷயத்திலும் ரொக்க பணமாகவாவது, அல்லது கரன்சி நோட்டுகளாகவாவது பாவித்து தன்னுடைய கணக்கில் பதிவுசெய்து கொள்ளவேண்டியது. மணியகாரன் பிறகு பணமனுப்புவிபரமடங் கிய மிமோராண்டத்தை (B-பாகத்தை) மணி ஆர்டலிருந்து கிழித்து மாசவாரி கட்டுகளாக டாப்பு செய்து வைக்கவேண்டியது.

12. ஒரு ரெவினியூ மணி ஆர்டர் துகை யானது சம்மந்தப்பட்ட மிராசுதாரால் சர்க் காருக்குச் சேரவேண்டிய கிஸ்தித் துகைக்கு குறைந்தபோதிலும், வந்ததுகையை கிராமக் கணக்குகளில் வரவு வைத்துக்கொள்ளவேண் டும். ஷை துகையானது டிமாண்டைக்காட்டி லும் ஜாஸ்தியாக விருந்தால் அதிகத் துகையை "அதிக வசூலில்" வரவு வைத்துக் கொள்ள வேண்டியது.

13. பெற்றுக்கொள்ளப்பட்ட ஒவ்வொரு ரெவினியூ மணி ஆர்டரிலும் மணியகாரனும் கிராமக்கணக்கனும் கையெழுத்து செய்ய வேண்டியது அடுத்த இருசால்தினம் வரும் போது எல்லாரெவினியூ மணி ஆர்டர்களுக்கும் ஒரு ஜாப்தா பிடித்து (ரெவினியூ மணி ஆர் டர் 4-ந. பாரம்) அவைகளை மற்ற வசூல் துகைகளோடு தாசில்தாருக்கு அனுப்பிவிட வேண்டியது.

14. ஷை ஜாப்தா தாசில்தாராலாவது, அல்லது தாலுகா சிரஸ்தார் அல்லது தாலுகா அக்கவுண்டாண்டினுலாவது கையெழுத்து செய்யப்பட்டு திருப்பி அனுப்பப்படும். ஷை ஜாப்தாவை கிராம மணியக்காரன் அதில் பணமனுப்பு விவரமடங்கிய மிமோரண்டத்தை (B-பாகத்தை) பதிவுசெய்து டாப்பு செய்து வைக்கவேண்டியது.

15. பணமனுப்புவதில் தேர்ந்த ஒழுங்கீ னத்தினலோ, அல்லது வேறெக்காரணத் தைக்கொண்டோ வந்து துகையை கிராமக் கணக்கில் வரவுவைக்க முடியாமல்படிக்குப் போய் ஆனல் தன்னல் வரவுவைத்து பெற் றுக்கொள்ளப்பட்ட ரெவினியூ மணி ஆர்டர் களை ஷை ஜாப்திாவின் பின் பக்கத்தில் விவ ரமாய் கண்டெழுதி மிமோரண்டம் பாகத்தை (B-பாகத்தை) கிழித்தெடுக்காமல்படிக்கு அப்படியே தாசில்தாருக்கு அனுப்பிவிட வேண்டியது. இப்பேர்கொத்த ரெவினியூ மணி ஆர்டர்களின் மொத்தத்துகையை தாசில் தாருக்கு அனுப்பும் இருசால்துகையில் சேர் க்கப்படாது.

16 மணியகாரனுடைய கையெழுத்தாவது அல்லது கிராமக்கணக்கனுடைய கையெழுத் தாவது விட்டுப்போயிருக்கும்ரெவினியூ மணி ஆர்டரை ஷை விட்டுப்போனதை பூர்த்தி செய்து உடனே திரும்ப அனுப்பும்படியாய், மணியக்காரனுக்கு திருப்பி விடவேண்டும். இருசாலில் ஏற்பட்ட ஒழுங்கீனத்தினல் துகை யை கணக்கில் வரவுவைக்காமல் மணியக்கார னல் தாசில்தாருக்கு அனுப்பப்பட்ட ரெவி னியூ மணி ஆர்டர் ஷை தாசில்தார் அவர்க ளால "நிராகரிக்கப்பட்டு" ("Refused") தன்னுடைய தலைமை ஸ்தானத்தில் (Head-quarters) யிருக்கும் போஸ்டுமாஸ்டருக்கோ, அல்லது சப்-போஸ்டுமாஸ்டருக்கோ அனுப் பப்படும். அனுப்பினதற்கு தாசில்தார் வரவு

ரசீது (Acknowledgment) பெற்றுக்கொள்ள வேண்டியது.

17. அனுப்பிய மணி ஆர்டர் சம்மந்தப்பட்ட மணியகாரனுக்கு கிஸ்தி தினத்திற்கு பிந்திபோய்ச் சேர்ந்தால், அதினல் பணமனுப்புவர் ரெவினியூ டிபார்ட்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தண்டனைகளிலிருந்து தன்னை நீக்கிக்கொள்ள முடியாது.

18. மதராஸ் நகரத்தில் வில்லேஜ் மணியக்காரர்கள் இல்லை. அவர்களுடைய வேலைகள் கர்ணன்களினல் செய்யப்படுகின்றன. ஆகையால் மதிருஸ் தாசில்தார்பேருக்கு அனுப்பப்படும். ரெவினுயூ மணிஆர்டர்களை போஸ்டாபீஸ்க்காரர்கள் மணி ஆர்டரில்கண்டிருக்கும் அந்தந்த டிவிஷன் கர்ணனுக்கு டெலிவர் பண்ணவேண்டியது.

19. இவ்விதம் ரெவினியூ மணி ஆர்டர்களை பெற்றுக்கொள்ளும் அந்தக்கர்ணன் மற்ற இடங்களில் மணியக்காரர்களுக்கு ஏற்படுத்தியிருக்கும் விதிகளை தானும் அனுசரித்து ஷை மணிஆர்டர்களை மதிருஸ் தாசில்தாருக்கு தன்னுடைய அடுத்த இருசாலோடு அனுப்பிவிட வேண்டியது.

20. போஸ்டுமாஞவது அல்லது வில்லேஜ் போஸ்டுமாஞவது வரவு ரசீதுகளை (Acknowledgments)பணமனுப்பியவருக்கோ அல்லது அவர் ஏஜண்டுக்கோ டெலிவர் பண்ணிபோட்டு அதற்காக தன்னுடைய புஸ்தகத்திலாவது, ரிஜிஸ்டரிலாவது கையெழுத்து வாங்கிக்கொள்ளவேண்டியது.

21. டெலிவர் ஆகாத வரவுரசீதுகள் (Acknowledgments) முதல் முதல் மணிஆர்டர் அனுப்பின ஆபீசில் (ஹெட் ஆபீசாகவிருந்தால்) 12 மாதகாலத்திற்கு வைக்கப்பட்டிருந்து, பிறகும் அவைகள் பேவார்சாக கிடந்தால் கழிக்கப்படும்.

22. ரெவினியூ மணி ஆர்டர்களை முதல் முதலில் அனுப்பும் போஸ்டுமாஸ்டர்களோ, சப்-போஸ்டுமாஸ்டர்களோ, அல்லது ப்ராஞ்சு போஸ்டுமாஸ்டர்களோ வரவு ரசீதுகள் (Acknowledgments) அனுவசியமான காலதாமதமில்லாமற்படிக்கும், கட்டணமில்லாமற்படிக்கும் ஷை மணி ஆர்டர்களை அனுப்பினவருக்கு டெலிவர் பண்ணப்படுவதற்கு ஜவாப்தாரியாவார்கள்.

PADDY.

## நெல்.

1. நாற்றங்காலில் நாற்றைக் கலக்கி விதைக்கவேண்டும். ஒரு செண்ட் விஸ்தீரணத்தில் ஒரு பட்டணம்படி விதையைத்தெளித்தால் போதுமானது. நாற்று வீரியமாய்ச் செழித்து வளரும்படி, நாற்றங்காலில் வேண்டும் உரம் போடவேண்டும்.

2. நாற்றை ஒவ்வொன்ருய்ப் பிடுங்கி நடவேண்டும். இந்த வேலையை செய்யும்போது தானே நேரில் மேல்பார்வை பார்க்கவேண்டும். அல்லது வேலையாரம்பத்திலாவது தான் கிட்டவிருந்து தான் சொல்லும்படி நடச்செய்யவேண்டும். இக்காரியத்தை செய்யச் சொல்வதிலாவது தான் வீட்டிலிருந்துகொண்டு தன் ஏஜெண்டுகளை அல்லது நடவுநடத்தும் ஆட்களை அப்படி நட வேண்டுமென்று வாய்மொழி உத்தரவாய்ச் செய்யச் சொல்வதிலாவது யாதொரு பிரயோஜனமுமில்லை. ஒற்றை நாற்றுநடவு விஷயத்தைப் பற்றி விவசாய டிபார்ட்மென்டார் அச்சிட்டிருக்கும் பத்திரிக்கைகளை வேண்டியவர்கள் இனமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்.

3. நன்ருய்க் கிளைத்துப் பயிராயிருக்கும் செடிகளைக் குறிப்பிட்டு அவைகளிலிருந்து நல்ல கதிர்களைப் பொறுக்கி தனியாயடித்து சுத்தஞ்செய்து அடுத்த வருஷத்திய வெள்ளாமைக்கு வேண்டிய விதையாகப் பத்திரப்படுத்தி வைக்கவேண்டும்.

4. நன்செய் நிலங்களில் நெல் அறுவடையானபின் நெல்பயிருக்கு உரமாகும்படியான பசுந்தாள் பயிர்களை விதைத்து உண்டாக்கி நெல் நடுமுன் எருவாக உழுதுவிடவேண்டும். இப்படி பசுந்தாள் எரு ப்யிரிடவேண்டுமாஞல், அந்நிலங்களில் மாட்டழிவில்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

இது பின்குறிப்பிட்ட பிரகாரம் யெய்துகொள்ளலாம்:—

(1) நன்செய் நிலங்கள் வைத்திருப்பவர்கள் ஒன்றுசேர்ந்து அவர்களுக்கு வேண்டிய பசுந்தாள் எருவை ஓர் அடக்கமான இடத்தில் பயிர்செய்தால் அதை எளிதில் மாட்டழிவில்லாமல் காப்பாற்றக்கூடும்,

(2) கம்புபோன்ற தண்ணீர்தட்டு தாங்கக் கூடிய புன்செய் தானியப்பயிரைப் பசுந்தாள் எருப்பயிருடன் கலந்து பயிர் செய்தால் மாடு மேய்ப்பவர்கள் அப்பேர்ப்பட்ட இடங்களில் மாடுகள் மேய்த்தல் தடைப்படும்.

(3.) மாடுகளை தொழுவில்கட்டி தீவனம் போடுவதற்கென்று தீவனப்பயிர்களைப் பயிர் செய்வதால் இது தடைப்படும். நெல் அறுவடையிருக்கிறதற்கு இரண்டு மூன்று நாளைக்கு முன் நெல்பயிரிருக்கும்போதே சடம்பு விதையை விதைத்தால் நெல் அறுவடைக்குப்பின் பயிராகி சுமார் இரண்டுமாத காலத்தில் நல்ல மாசூல் கிடைக்கும். இதை அறுத்து காய வைத்து படப்படைத்து வைத்துக்கொண்டு வைக்கோலுடன் சேர்த்து மாடுகளுக்குத் தீவனமாய் உபயோகிக்கலாம்.

பசுந்தாள் எருப்பயிர்களை ஒரு ஏக்கரா விஸ்தீரணத்திற்குக் குறையாத இடத்தில் விதைத்துப் பரீட்சிக்கவேண்டும். இப்படி செய்யாமல் கொஞ்ச விஸ்தீர்ணத்தில் பயிர் செய்தால் அது பூச்சிகளாலும் நோய் நொடிகளாலும் பீடிக்கப்படும். இந்தப்பயிர் சொல்பமாய் சென்டு கணக்கான விஸ்தீர்ணத்தில் பயிர் செய்யும்போது பூச்சிகளால் அழிமதி செய்யப் படுவதைப்போல் ஜாஸ்தி பரப்பான விஸ்தீர்ணத்தில் பயிரிடும்போது அழிமதியாவதில்லை. அந்தப் பிரதேசங்களுக்கு லாயக்கில்லாத பசுந்தாள் எருப்பயிர்களைப் பயிர் செய்தால் அவைகள் பலிதம் கொடுக்கமட்டாது. நெல்பயிர் அறுவடைசெய்த காலம் முதல் மறுபடி அதே இடத்தில் நெல்பயிர் செய்ய ஐந்துமாத சாவகாசமிருக்கும் இடங்களில் பசுந்தாள் எருவுக்காக சடம்புப்பயிர் செய்வதால் பிரயோஜன மிருக்கமாட்டாது. ஏனென்றால் சடம்புப்பயிர் சுமார் மூன்றுமாத காலத்திற்குள் முற்றிக் காய்ந்துபோகும். இதே பிரகாரம் நெல் நடுவைக்கு இரண்டுமாத சாவகாசமிருக்கும்போது அங்கே கொளுஞ்சி(காட்டவுரி)ப்பயிரை விதைப்பதிலும் பிரயோஜனமில்லை. ஏனென்றால் இந்த இரண்டுமாதத்தில் கொளுஞ்சிப் பயிர் சிறு முளைப்பயிர்களைப் போலிருக்குமே தவிர பெரிதாக வளர்ந்திராது. தஞ்சாவூர் ஜில்லாவின் காவேரிதீர நிலங்களில் நீர்வடிவுக்கிடமில்லாமல் சதுசதுப்பாயுள்ள இடங்களில் சடம்புப்பயிரை பசுந்தாளெருவுக்காகப் பயிர் செய்வதில் பிரயோஜனமில்லை. ஆனால் அப்பேர்ப்பட்ட இடங்களில் தக்கைப்பூண்டை விதைத்தால் அது அவ்விடங்களில் சரியானபடி முளைத்துப் பயிராகும்.

நெல்பயிர் நடுகை செய்வதற்குக் குறைந்தது ஒரு வாரத்திற்கு முன் பசுந்தாள் எருப்பயிர்களை நிலத்துக்குள் உழுது மட்கவைக்க வேண்டும். தஞ்சாவூர் ஜில்லாவிற் சில பாகங்களில் வெகுவாய் நன்செய்ப் பயிருக்கு எருவாவது அல்லது இலைக்தழைகளாவது உரமாகப் போட்டுப் பயிர்செய்யாத இடங்களிலிருக்கும் கிருஷிகருக்கு இந்த யோசனை சொல்லப்படுகிறதே தவிர மற்றவர்களுக்கு இது அநேகமாய்த் தெரிந்தவிஷயம். பசுந்தாள் எருப்பயிர் செய்யும் காலத்திற்கு முன் பெய்யும் மழைப்பதத்தை வீணாக்காமல் நிலங்களை முன்கூட்டி உழுது பண்படுத்திவைத்து பின்னால் கால மழைகள் பெய்தவுடன் பசுந்தாள் பயிர் விதைக்க நிலத்தைத் தயார் செய்துவைக்க வேண்டும். பசுந்தாள் பயிர் செய்ய முயன்றவர்கள் அநேகர் அப்பயிர் விதைக்கும் நாள்வரை அங்கே போவதில்லை. இப்படிச் செய்வதால் விதைக்கும் நிலம் போதுமானபடி முன்னமே உழுது பக்குவப்படாமல் அதில் விதைக்கும் விதை சரியானபடி பயிராக இடமிருக்கிறதில்லை. மேலும், இந்த விதை விதைக்கும் காலத்தில் மற்ற புன்செய்ப்பயிர்கள் விதைக்க வேண்டிய கால மாகியபடியாலும் இந்தப்பசுந்தாள் எருப்பயிருக்குத் தக்க பருவம் செய்ய இடமில்லாமலும் பயிர் ஓங்கி வளர்கிறதற்கு இடமில்லாமலும் போகிறது.

விவசாய டிபார்ட்மெண்டார் பசுந்தாள் எருப்பயிர்களைக் குறித்து ஒரு பத்திரிகை பிரசுரித்திருக்கிறார்கள். விவசாயப் பஞ்சாங்கத்திலும் அவ்விஷயத்தைக் குறித்து வியாசங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. பசுந்தாள் பயிர்களை சரியானபடி பயிரிட்டு தெரிந்துகொண்ட மெம்பர்கள், அந்தந்த விவசாயச் சங்கங்களுக்குத் தெரிவிப்பார்களாகில் அந்தச்சங்கத்துக் காரியதரிசி. விவசாய டியார்ட்மெண்டாருடனாவது மற்ற வியாபாரிகளுடனாவது ஒப்பந்தம் பேசி விதைகளைச் சேகரித்துவைக்க ஏற்பாடுகள் செய்வார்கள்.

## REVIEW OF THE PRESS.

## பத்திரிகை ஆராய்ச்சி.

### PARENTS AND GURUS.

### பெற்றோர்களும் ஆசாரியர்களும்.

அக்டோபர் மாஸத்து மாதர் மனோரஞ்சினியில் திரட்டியிருக்கும் அடியில் கண்ட பாரத நீதிகள் எல்லாரும் படிக்க வேண்டியவை.

1. பூமியைக்காட்டிலும் தாய் பெரியவள். ஆகாசத்தைவிட தந்தை பெரியவன். மனது காற்றைக்காட்டிலும் அதிக வேகமுடையது. துக்கம் எல்லாவற்றிலும் பெரிது.—ஆரண்ய பர்வம்.

2. தாய்க்குச் சமானமான ஆகரவு வேறு இல்லை. அவளுக்குச் சமானமான கதி வேறு இல்லை. அவளைப்போலக் காப்பாற்றக்கூடியவரும் இல்லை. அவளுக்கு ஒப்பாகப் பிரியமுடையவர்களும் இல்லை.—சாந்தி பர்வம்.

3. தந்தையே புண்ணியம். தந்தையே சுவர்க்கம். பிதாவே மேலான தபசு. தந்தையைச் சந்தோஷப்படுத்தினால் சகல தேவதைகளும் சந்தோஷப்படுவார்கள்.—சாந்திபர்வம்.

4. ஓ! தர்மந்தெரிந்த மகாபுருஷா! ஆசாரியருடைய வார்த்தைகள் தர்மத்தை அநுசரித்திருக்குமென்று சொல்லப்பட்டிருக்கிறது. தாயானவள் எல்லா ஆசாரியர்களுக்கும் மேலான குரு.—ஆதிபர்வம்.

5. எவனொருவன் மாதாபிதாக்களின் வாக்கியத்தின்படி நடந்து, அவர்களுக்கு நன்மையைச் செய்து, நல்ல வழியில் நடக்கிறானோ அவனே புத்திரனென்னப்படுவான்.—ஆதிபர்வம்.

6. நற்குணமுடையவனும், பெற்றோர்களுக்கு மேன்மையை எப்பொழுதும் தேடுகிறவனுமான குமாரன் மற்றவர்களைக் காட்டிலும் வயதில் சிறியவனானாலும் சகல நன்மைகளையு மடையத்தகுந்தவன். ஆகையால் அவன் மகா உத்தமனானவன்.—ஆதிபர்வம்.

7. அசட்டையின்றி உன் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய். அதற்கு மேலான தர்மம் வேறில்லை.—ஆரண்யபர்வம்.

8. ஒரு பூ தன்னுடைய செடியினின்றும் விழுவதுமுண்டு. ஒரு பழம் தன் மரத்தைவிட்டுக் கீழே விழுவதுமுண்டு. ஆனால் ஒரு தகப்பன் தனக்கு எவ்வளவு மனவருத்த மிருந்தாலும், தன் குமாரனிடத்திலுள்ள பிரியத்தை விட்டுவிடான்.—சாந்திபர்வம்.

9. ஆசாரியனுக்குப் பணிவிடை செய்வதனால் ஆயுளும், கீர்த்தியும், சம்பத்தும் விருத்தியாகும். ஆகையால் அவர்களுக்குத் தக்க ஆசனங்கொடுத்து, வந்தனஞ்செய்து, அவர்களை நாம் மரியாதைப்படுத்தவேண்டும்.—ஆநுலாஸநிகபர்வம்.

10. ஒரு மகாபாபி ஒரு மனிதனுக்கு மதுரமான வார்த்தைகளைச் சொல்லும்படி யகப்படுவான். ஆனால் நல்ல புத்திமதிகள் தனக்குப் பிரியமில்லாதவைகளானாலும், அவைகளைச் சொல்லுகிறவனும், கேட்கிறவனுமான ஒருவன் அகப்படுகிறது வெகு துர்லபம்.—ஸபாபர்வம்.

11. ஒருவன் நமக்குச் சத்துருவாக விருந்தாலும் அவனிடத்தில் நல்லகுணம் இருந்தால் அதை நாம் தெரிவிக்கவேண்டும். நமக்கு ஒருவன் குருவாக விருந்தாலும் அவனிடத்தில் கெட்டகுணமிருந்தால் அதை நாம் வெளியிட்டுச் சொல்லவேண்டும். ஆகையால் நாம் எப்பொழுதும் நம்முடைய புத்திரனுக்கும் சிஷ்யனுக்கும் நல்ல புத்தியை போதிக்கவேண்டும்.—விராடபர்வம்.

## PALMYRA TREE.

## பனைமரம்.

பனை மரத்தைப்பற்றிய அடியில் கண்ட விஷயங்களைத் கமத்தொழில் விளக்கத்திலிருந்து எடுத்திருக்கிறும்.

முன்னுரை—இது நம்நாட்டு நீண்டகாலத்து பயிர். இது கடற்கரை யோரங்களில் விசேஷமாயுள்ளது. நஞ்சைவயல்களின் வரப்புக்களிலுமுண்டு. நஞ்சையைப் பார்க்கிலும் புஞ்சையில்மிகுதி. இம்மரம் தஞ்சாவூர் ஜில்லாவின் சமுத்திரக்கரை யோரத்திலும் இலங்கையிலுள்ள யாழ்ப்பாணத்திலும் அதிகம். இது வேலிக்காகப் பயிராக்கப்படுகிறது.

பூமி—இதற்கு மணற்பாங்கேயுரித்தானது. உப்பு சம்மந்தமானது விசேஷம். களிவாயிலும் வளரும். கரிசல் கப்பிக்கல் பூமி சிலாக்கியமானது.

பயிரிடல்—கொல்லையின் வேலிக் கால்களை நன்ருய்க் கொத்தி வாங்கி புற்பூண்டுகளை நீக்கி மழைகாலத்தில் அதாவது புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் இரண்டு மூன்று அடிக்கு ஒன்றிரண்டு கொட்டைகள் வீதம் போடுவார்கள். இவைமுளைத்து வெளிக் கிளம்ப இரண்டு மூன்றுமாதங்கள் செல்லும். இதற்கு எருப்போடல், தண்ணீர்விடல், களையெடுத்தல் முதலிய செய்நேர்த்திகள் செய்கிற வழக்கமில்லை. இவைகள் யாவும் கிரமமாகச்செய்யும் பட்சத்தில் சீக்கிரத்தில் நல்பலனைக்கொடுக்கும்.

காய்ப்புக்குவருங்காலம்—பன்னிரண்டு வருஷத்திற்குமேல் முப்பது வருஷத்திற்குள் காய்க்கும். அது முதல் பதனிகட்ட ஆரம்பிப்பார்கள். சுண்ணும்பு தடவின கலயத்திலிறக்குவதற்குப் பதனியென்றும் அது தடவாமல் வெறுங் கலயத்தில் இறக்குவதற்கு "கள்" என்றும் பெயர் வழங்கிவருகிறது. ஒருமரத்திற்கு ஐந்து ஆறு, கலயங்கள் போட்டு பதனி இறக்குவார்கள். நல்ல மரத்தில் பட்டணம்படி 4 வரைக்கும் பதனி கிடைக்கும். இந்தப்பதனியில் சர்க்கரை அதிகம். இதிலிருந்து சர்க்கரை வெல்லம் செய்யப்பட்டு நமதுநாட்டில் வழங்குகிறது. பனைவெல்லம் என்று வழங்குவது இதுவே. இது மருந்து செய்கிறதற்கு உபயோகப்படுகிறது. பனங்கற்கண்டும் இதிலிருந்துதான் எடுக்கிருர்கள். இது தைமாதத்தில் பூத்துக் காய்த்து ஆடிமாதம் வரையும் பழுத்து, பழங்கள் கிழே தானகவே உதிர்ந்து கொண்டிருக்கும் தானகவே உதிர்ந்தபழங்களாலே மரம் பயிராவதுமுண்டு.

வெல்லம்—ஒரு குவார்ட்டு கருப்பநீரிலிருந்து கால் இராத்தல் வெல்லம் கிடைக்கும்.

காய்க்கவிடுதல்—ஐம்பது வருஷம் வரையில் பதனிகட்டுகிருர்கள். இரண்டு மூன்றுவருஷத்திற்கு ஒருமுறை நிறுத்திக் காய்க்கவிடவேண்டும்.

பூ—இதைச்சுட்டுக் கார்த்திகை கிருத்திகைக்குப்பைகட்டி அதில் நெருப்புவைத்து பொறி பறக்கச் சுற்றுவார்கள். விறகுக்குபயோகம்.

காய்—இதிலிருந்து நொங்கு எடுத்து விற்கிருர்கள். இதைச் சிலர் மாத்திரமன்றி மற்றவர்களும் தின்கிருர்கள். இது குளிர்ச்சியுள்ளது. ஜீரணமாகாது. சிலமாறுதல்களுடன் மலத்துடன் வெளிப்பட்டுவிடும். இதன் ஜலம் குடிக்கிறதற்கு இனிமையாக இருக்கும். வேர்க்கூர்களுக்குத் தடவினல் அவை அமர்ந்துவிடும்.

பழம்—மாம்பழம் பித்தமானது, வாசனையுள்ளது. பசிக்குப் பனம்பழத்தைத் தின்ருல் பித்தம் செய்கிறதைச்செய்யட்டும் என்னும் பழமொழி உலகத்தில் வழங்குகிறது. இதை

ஏழைச்சனங்கள், சர்க்கரையிட்டு அவித்தும் உண்கிறார்கள்

மட்டை—ஒவ்வொரு மரத்திலும் இருபது முதல் ஐம்பது வரையிலும் இருக்கும். மாதத்திற்கு ஒரு மட்டைதான்விடும். சிலர் வருஷத்திற்கு 12 மட்டைகள் தான் வெட்டுகிறார்கள்.

ஓலை—இது கணக்குப் புத்தகம் எழுத உபயோகப்படுகிறது. முற்காலத்தில் இதுதான் காகிதம்போல் வழங்கப்பட்டது. கூரைபோடுவதற்கும் அடைப்பு அடைப்பதற்கும் உபயோகப்படுகிறது. விறகாகவும் பிரயோசனப்படுகிறது.

நார்—மட்டையிலிருந்து நார் எடுக்கப்படுகிறது. சிலர் அறிவாள்கொண்டு கிழித்து எடுக்கிறார்கள். சிலர் ஊறவைத்தும் எடுக்கிறார்கள். நார் எடுப்பதற்கு இளமரத்தின் மட்டையே பிரயோசனமுள்ளது. 10 இராத்தல் நார் 1 ரூபாய். இந்நாரைக்கொண்டு ப்ரஷ் செய்யலாம்

---

## THE PALACE IN DELHI.

## டில்லி அரண்மனை.

---

டில்லியைப் பற்றி எழுதும்பொழுது சுதேசமித்திரன் சொல்லுகிறது:—

"ஷாஜிஹான் சக்ரவர்த்தியால் கட்டப்பட்ட அரண்மனையானது 1600 அடி கிழக்கு மேற்கிலும் 3202 அடி தெற்கு வடக்கிலும் சதுரமாயுள்ள கட்டிடம். இதற்குள் நுழையும் வழியில் 375 அடி நீளமும் இரண்டுமெத்தையுமுள்ள ஒரு ஹாலும், அதற்குப் பின்புறத்தில் நௌபத்கானு அல்லது ஸங்கீதம்மண்டபமும், பிறகு ஒரு பெரிய ஹாலின் மத்தியில் திவான், இ-ஆம் அல்லது பேட்டி மண்டபமும், இதற்குப்பின்னால் ரங் மகால் அல்லது பலவர்ண மண்டபமும், இதற்கு வட பக்கம் திவான்-இ-காஸ் அல்லது ப்ரைவேட் பேட்டி மண்டபமும், இருக்கின்றன. இந்த ப்ரைவேட் பேட்டி ஹாலைப்போல உயர்ந்த நேர்த்தியான அலங்காரங்கள் உள்ள கட்டிடம் உலகத்தில் வேறங்குமில்லை. இந்த மண்டபத்து அடியில் யமுனாநதி ஓடுகிறது. இதன் சுவர்கள் ஒன்றில் "பூலோககைலாஸம் ஒன்று இருப்பதானல் அது இது தான்! இதுதான்!" என்று எழுதியிருக்கிறதென்றால், இதனுடைய சிறப்பான அலங்காரத்தை யூகித்துக்கொள்ளலாம். இதற்குத் தென்பாகத்தில் ஆயிரம் அடி சதுரமுள்ள, ராஜஸ்திரீகள் வஸித்தஹால் இருக்கிறது. திவான்-இ-ஆமில் பேர்போன மீகாக் த்ரோன் என்று ஷாஜிஹான் சக்ரவர்த்தி செய்து அவரும் அவருக்குப் பின்னால் வந்தவர்களும் கொலுவிலிருந்த மைலாஸனம் இருந்தது. இந்த மைலாஸனம் 30 லக்ஷ ரூபாய் பிடித்ததென்றால் இதில் பொன்னும் அநேக அருமையான ரத்தினங்களும் மனம் மயங்கும்படியாய் சிறந்த வேலைப்பாடுடன் அமைக்கப்பட்டிருந்ததைச் சொல்லவேண்டுமா? இந்த ஆஸனத்தை பகதூர்ஷா சீக்ரவர்த்தியாயிருந்தபோது டெல்லியின்மேல் படையெடுத்து கொள்ளை கொண்டுபோன நாதர்ஷா கொண்டுபோய்விட்டான். இப்போது அது டெகிரானில் இருக்கிறது. இந்த அரண்மனையிலிருந்த அநேக விலைபெற்ற சாமான்களும் மாணிக்கங்களும் இரத்தினங்களும் தகுந்த பந்தோபஸ்தில்லாமல் பிற்காலத்தில் திருட்டுப் போய்விட்டன. இப்போதுங்கூட உலகத்தில் எங்கும் நிகரற்றதாயும், பல விநோதமும் விலைபெற்ற அலங்காரமுள்ளதாயும், வெள்ளைச் சலவைக்கற்களால் கட்டப்பட்ட பலபாகங்களுள்ளதாயும், நவரத்தினங்களிழைத்த விசேஷக்கொலு மண்டபங்கள் உள்ளதாயும், பார்த்தோர் வியந்து பிரமிக்கும்படியான விஸ்தீரணமும் உயரமும் அகலமுள்ள கட்டிடமாயிருக்கிறது. இப்போது கவர்ன்மெண்டார் தக்கபடி காவல் செய்திருக்கிறார்கள்.

## ELECTRIC GARDENS.

## மின்சாரத் தோட்டங்கள்.

---

இந்த விஷயமாக “இந்துநேச”னில் ஒருசிறு வியாஸம் காணப்படுகிறது.

நமது நாட்டில் தெருக்களில் கூத்தாடிகள் விளையாடும்போது, மாஞ்செடி உண்டாக்கி, அதினின்றும் காய்கள் பறித்துக்கொடுப்பதை அபிமானிகள் கண்டும் கேட்டுமிருக்கலாம். மந்திரத்தினால் அது சாத்தியமென்பார் சிலர். இன்னும் சிலர் “மந்திரமுமில்லை மாயமுமில்லை நமக்குத் தெரியாமல் செடியை மறைத்து வைத்திருக்கிறான்” என்பர். அது எப்படியிருக்கினுமிருக்க, அதைக்காட்டிலும் அதிசயமான விஷயம் மேற்றிசையிலிருந்து நமக்கு எட்டுகிறது. ஸ்விட்ஜர்லாந்து வாசியான ஒருவர் ஒரு யந்திரம் கண்டுபிடித்திருக்கிறதாயும், அது மின்சார சம்பந்தமுள்ளதாகவும், அதனால் விதைகள் வெகு சீக்கிரத்தில் அங்குரிக்கின்றதாகவும், தோட்டம் காடுகளில் பயிர்களுக்கு நேரிடும் வியாதிகள் அதனால் அற்றுபோவதாகவும், பட்டுப் போனதாகத் தோற்றும் செடிகள் மறுபடியும் அதனால் உயிர் பெறுவதாகவும் கூறப்படுகிறது.

அவ்யந்திரம் ஒரு டன் கனமுள்ளதாம். அதிலிருந்து மின்சாரங்கள் விதைகளுக்குப் பாயும்படி ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. கீழே தாமிரத்தகடு வைத்து இதனிடையில் கம்பளத்தின் மேல் விதைகளை வைத்து, யந்திரத்தைத் திருப்பினால், மின்சார கிரணங்கள் விதைகளுக்குப் பாய்கின்றன. ஒரு விதமான திராவகத்தினால் நிலத்துக்கு ஜலம் பாய்கிறதாம். அதன் ரகசியத்தை மட்டும் யந்திரத்தைக்கண்டு பிடித்தவர், ஒருவருக்கும் சொல்வதில்லையாம். இதைப் பற்றிய பரிசீலனைகள் லண்டன் நகரத்தில் நடந்து வருகின்றன. விதைகள் சீக்கிரத்தில் அங்குரிப்பது சீதோஷ்ண ஸ்திதியினாலோ அல்லது வேறு காரணத்தினாலோ என்பது இன்னும் தெரிந்தபாடில்லை. மின்சாரத்தினால் விவசாயத்துக்கு மேற்கூறியபடி உதவி ஏற்படும் விஷயத்தில், அநேக விதமான நன்மைகள் உண்டாகக்கூடுமென்று நாம் நிச்சயமாகச் சொல்லலாம்.

---

## ANTS.

## எறும்புகள்

---

இவைகளை கவனித்த ஒருவர் சொல்லுகிறார்:—“நான் வைத்திருந்த எறும்புகளில் வேலைசெய்கிற எறும்புகள் ஏழுவயதுவரையும், இராணி எறும்புகள் 15 வயதுவரையும் உயிர் வாழ்ந்திருக்கின்றன. எறும்பினங்கள் ஒவ்வொன்றிலும் சிறு எறும்புகள் தவிர, வேலை செய்யாத ஆண் எறும்புகளும், இறக்கையற்ற வேலை செய்கிற எறும்புகளும், ஒன்று அல்லது ஒன்றிலதிகம் இராணி எறும்புகளுக்கு முதலில் இறக்கை இருக்கும். ஆனால் கல்யாணத்திற்காக அவைகள் ஒரு சமயம் வெளியில் பறந்து சென்று மீளும். மீண்டதும் இறக்கைகளைத் தூர எறிந்துவிடும். ஏனென்றால், அதற்கப்புறம் அவைகள் கூட்டைவிட்டு எக்காலத்தும் வெளியில் போவதின்று. வேலை செய்யும் எறும்புகள் சாதாரணமாக முட்டையிடுவது வழக்கமன்று. ஆனால், தம்கூட்டத்திற்கு வேண்டிய ஸகல கார்யங்களையும் அவைகளே பொறுப்பாகச் செய்யும். சிறு எறும்புகள் கூட்டிலிருந்துக்கொண்டு அறைகளும், டன்னல்களும் செய்துகொண்டிருக்கும். தவிரவும், அவற்றிலும் சிறு எறும்புகளை வயதுக்கிரமமாகப் பிரித்து வைத்துப் போஷிக்கவும் பாதுக்காக்கவும் செய்து வரும். பள்ளிக்கூடங்களில் பல வகுப்புகளில் பிள்ளைகள் ஒழுங்காகவைக்கப்பட்டிருப்பதுபோல் என் கூடுகளில் பலசமயம் இச்சிறு எறும்புகள் வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன்.”

## BOYS' SECTION.
## சிறுவர் பகுதி.

BURMAN CHARITIES.

**பர்மிய தர்மம்.**—பர்மன்மார் தரும காரியங்களில் யாரையும் கூட்டுச் சேர்ப்பதில்லை. அவனவன் சக்தியானுஸாரம் ஏதாகிலும் செய்வதொழிய, 'நாலு பெயர்' சேர்ந்து பரஸ்பரம் உபகரித்து ஏதாகிலும் தரும காரியம் நடத்துவதென்பதில்லை. ஏனெனில் தருமங்களில் கூட்டுக்காரரிருந்தால் அவர்களுக்குப் புண்ணியத்திலும் பாகம் சேர்ந்துவிடுமென்கிற பயம் அவர்களுக்கு அதிகம் ஆதலால் நமது நாட்டில் 'தம்படி' வசூலித்துக் கோபுரம் கட்டுவது முதலிய வழக்கங்கள் பர்மாவில் காணுவதில்லை.

STOPPING CIGARETTE SMOKING.

**ஸிகரேட்டுப் பிடித்தலைத்தடுத்தல்.**—சீனதேசத்தில் பாதிரிகள் ஸிகரெட்டுப் பிடிப்பதால் உண்டாகும் கெடுதியைப் பற்றியும், அதை முற்றும் விட்டொழிக்க வேண்டுமென்பதைப் பற்றியும், வீதிகள் தோறும் உபந்யாஸஞ் செய்து வருகிறார்களாம். நம்முடைய தேசத்தில் ஸிகரெட்டுப் பிடிக்காத பிள்ளைகள் பெரும்பான்மையாக இல்லையென்றே சொல்லலாம். பரோடாவில் பூரணவயது வராதவர்களுக்குச் ஸிகரெட்டு விற்றால், விற்பவருக்குத் தண்டனை யுண்டாம். அம்மாதிரி தண்டனை யெங்கும் ஏற்படுமாயின் நலம். சிறு பிள்ளைகள் ஸிகரெட்டுப் பிடிக்கும்போது பார்த்தாலும் தண்டிக்கப் படுவார்களென்னும் சட்டமொன்று ஏற்படுதலும் நலமாம்.—வைசியமித்திரன்.

PUNISHMENT FOR IDLERS.

**சோம்பேறிகளுக்கு தண்டனை.**—உலாந்தாக்காரர் மிக்க முயற்சியுள்ளவர்கள். சோம்பேறிகளுக்கு இடங்கொடுக்கமாட்டார்கள். வேலைசெய்ய மறுத்து சோம்பேறித் தடியன்களாயிருப்பவர்களை ஒரு உயர்ந்த ஆழமான தொட்டிக் குள்ளே இருத்துவார்கள். அந்தத்தொட்டிக்குள்ளே ஒரு யந்திரத்தை வைப்பார்கள். அந்த யந்திரத்தை இயக்குவதாலே தொட்டிக்குள்ளேயுள்ள ஜலம் வெளியேபோகும். வேறொரு யந்திரம் தொட்டிக்குள்ளே தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கும். அந்ததொட்டிக்குள்ளே இருத்தப்படும் சோம்பேறி யந்திரத்தை அதிவேகமாய் இயக்கி அதற்குள்ளேயிருக்குந் தண்ணீரை வெளியே போக்கிக்கொண்டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் தண்ணீர் அவனுடைய தலைக்குமேலெழும்ப அவன் சாகவேண்டிவரும். இதனாலே அவன் சோம்பல் நீங்கி வேலைசெய்யக் கற்றுக்கொள்ளுகிறான்.

SOME BAD HABITS.

**சில கெட்ட வழக்கங்கள்.**—ஒரு சங்கத்தில் போய் உட்காரும்பொழுது நமக்குள்ளேயே பாடிக் கொள்ளுதல், கைவிரல்களாலும், கால்களாலும், தாளம் போடுதல், துடை ஆட்டுதல் இவைகளெல்லாம்கெட்டவழக்கங்களில் சேர்ந்தவைகள். விருந்து முதலியவை நடக்கும் இடங்களில் நாம் போய் உட்கார்ந்தால் எல்லாரையும்விட வேகமாயாவது மெதுவாயாவது சாப்பிடவே கூடாது. இலையில் போட்டிருக்கும் பதார்த்தத்தை முகர்ந்து பார்த்தல் மிகவும் அவலக்ஷணமான குணம். காறுதல், இலையோரங்களில் கோழை உமிழ்தல், வாயுப்பறிதல் இவை போன்றவைகளெல்லாம் மிகவும் அவலக்ஷணமான குணங்கள்.

KARIKKAL CHOLA.

**கரிக்கால் சோழர்.**—முன்காலத்தில் காவிரி நதியானது உடைப்பெடுத்துத் தேசத்தைப் பாழாக்குவது வழக்கம். ஏனென்றால் இந்தக் காலத்திலிருக்கிறது போல அந்தக் காலத்தில் காவிரியின் இரு பக்கங்களிலும் கரைகளே கிடையாது. வெள்ளத்தைத் தடுப்பதற்காக முதல் முதல் காவிரிக்குக் கரை கட்டினவர் கரிக்கால் சோழர். இவர் வெகு காலத்திற்கு முன் அரசராக இருந்தார். இவரை ஆதி சோழர் என்று சொல்லலாம். இவருடைய கால், கரியைப்போல் கறுப்பாக இருந்தபடியால் இவருக்கு 'கரிக்கால் சோழர்' என்ற பெயருண்டாயிற்று. இவர் பிறப்பதற்கு முன்னமே இவருடைய தகப்பன் இறந்துபோய்விட்டார். இவர் குழந்தையாக இருக்கையில் பட்டத்திற்கு வாராதபடி இவரைக் கொல்வதற்காக இவருடைய சத்துருக்கள் இவர் குடியிருந்த வீட்டில் கொள்ளிவைத்தார்கள். இவர் உயிர் தப்பி ஓடுகையில் ஒருகால் நெருப்பில் பட்டுக்

கருகிப்போயிற்று. ஆகையால்தான் இவருக்கு மேலே சொன்ன பெயருண்டாயிற்று.

A DOG STORY.

**ஒரு நாயைப்பற்றிய கதை.**—பல்லாரி கலெக்டர் ஜே ஏ. கம்மிங்கு பல்லாரியிலுள்ள மிருகவைத்திய சாலையின் விஸிடர்ஸ் புஸ்தகத்தின் பின் வருமாறு எழுதியிருக்கிறார்:—

"நான் பல்லாரியில் கலெக்டராக இருந்துவந்த 2½-வருஷங்களுள், அடிக்கடி மிருக வைத்தியசாலையைப் பார்வையிட்டு வந்தேன். மிருகங்களின் வியாதிகளை சௌக்கியப்படுத்தி வருவதில் கவலை அதிகம் எடுத்துக்கொள்ளப் படுவதை நேரில் பார்த்து வந்திருக்கிறேன். ஒருநாள் நடு ராத்திரியில் என்னுடைய நாயை குச்சுநாய் கடித்து காயப்படுத்திவிட்டது. இதற்குமுந்தி என்நாய், மிருக வைத்திய சாலைக்குக் கொண்டுபோகப்பட்டு, அங்கு அதன் வியாதிசௌக்கியப் படுத்தப்பட் டிருந்ததை அறிந்திருந்தமையால், அது உடனே காயத்துடன் பட்டணத்தின் வழியாக வைத்தியசாலைக்குச் சென்று, மிஸ்டர் ஸஹஸ்ரபுத்தியின் படுக்கை அறையில்நின்று தன் காயத்திற்கு சிகிச்சை செய்யும்படி அவரை எழுப்பிற்று. அதன் பிறகு அவர் அதன் காயத்தைச் சௌக்கியப் படுத்துவதில் கவலையெடுத்து கூடிய சீக்கிரம் சௌக்கியப்படுத்தினர் என்பது சொல்லாமலே விளங்கும்."

COAL.

**நிலக்கரி.**—அநேகம் ஆயிரம் வருஷங்களுக்கு முன்னே பூமியின் மேலிருந்து மாஞ்செடிகள் சில காரணங்களால் பூமிக்குள் புதைக்கப்பட்டு பூமிக்குள் மட்கி சில வேறுபாடுகளுண்டானதின் மூலமாக நிலக்கரியாகிய வஸ்து பூமியின் கீழ் ஏற்பட்டது. நிலக்கரியானது மாஞ்செடிகளின், சேஷமென்பதை வெகு எளிதாய் ரூபிக்கலாம். நிலக்கரி வெட்டியெடுக்கப்படும் சுரங்கங்களுட் சென்று சுரங்கங்களைச் சுற்றியும் சுரங்கங்களின் மூகட்டையும் சற்று கவனித்துப் பார்த்தால் அங்கே மரங்களின் கொப்புகளை, கொடி, தழை, முதலானவை ஒடியிருப்பதைத் தெளிவாய்ப் பார்க்கலாம். அல்லது ஒரு துண்டு நிலக்கரியையெடுத்து அதில் லேசான தகடு ஒன்று சீவி அதை உற்றுப் பார்த்தால் அதில்கூட இலைகளையும் இலைகளின் நரம்புகளையும் தெளிவாய்க் காணலாம். நிலக்கரியிலிருந்துண்டாகும் வஸ்துக்களிலெல்லாம் முக்கியமானது நிலக்கரிவாயுத்தான். இந்த வாயுவைக் கொளுத்தினல் வெகு பிரகாசமாக எரியும். கொளும்பு, லண்டன் முதலான பெரிய பட்டணங்களில் தெருலாந்தர்களிலும் வீட்டு விளக்குகளிலும் இந்த வாயுவைத்தான் எரிக்கிறார்கள். இந்த வாயுவை நிலக்கரியிலிருந்துண்டாக்குவது வெகு ஸுலபம்.

இந்தியாவிற்கு இயற்கையாயேற்பட்டுள்ள செல்வங்கள் ஏராளமானவை. இவைகளில் நிலக்கரியுமொன்று. இங்கிலாந்து தேசமொன்று தவிர, ப்ரிட்டிஷ் ராஜ்யமுழுவதிலும் நிலக்கரி உற்பத்தியில் முதன்மையாய் நிற்பது இந்தியாவே.

ANTS.

**எறும்புகள்.**—எறும்புகளில் அனேக வகைகள் உண்டு. வீட்டில் ஸாதாரணமாய்ப்பார்ப்பது சிற்றெறும்பு. சில வேளைகளில் கடிக்கத்தெரியாமல் விரைவாய் ஓடும் பிள்ளையாரெறும்பு பார்க்கிறோம். கட்டெறும்பு சில வேளைகளில் காண்கிறோம். மா முதலிய மரங்களின்மேல் தேள் கொட்டினாற்போல் கடிக்கும் சிகப்பெறும்பு இருக்கிறது. வீட்டிலிருக்கப் பட்ட எறும்பு சுவரிலும் தரையடியிலும் கூண்டு கட்டி இருக்கும். இவை வீட்டு ஸாமான்களை நாசப் படுத்துகிறதாகையால் அனேகர் எறும்பு வாராதவிதம் பலவித பக்குவங்கள் செய்கிறார்கள். அவைகளில் சிலவற்றை இங்கு வரைகிறோம்.

சில இடங்களில் சாம்பல் போட்டு கரைகட்டுவதுண்டு. கட்டில் கால்களுக்கு சிறு தட்டுகளில் ஜலம் வார்த்து வைப்பதுண்டு. சர்க்கரைப்பானைகளை நீர் விட்ட தட்டுகளிலும் பானைகளின் கழுத்தில் எண்ணெய்ச்சீலை சுற்றிவைப்பதுமுண்டு. எறும்புகளை எவ்வளவுதான் கொன்றாலும் பூண்டு அறாது. எறும்புப் புத்துகளைக்கண்டு அவைகளில் கொஞ்சம் கெரஸின் எண்ணெயை ஊற்றிவாயைமூடி வைப்பது மிகவுத்தமம்.

## LADIES' SECTION.
## ஸ்திரீகள் பகுதி.

ONION.

**வெங்காயம்.**—வெங்காயத்தை அறுத்து, நெடுநேரத்துக்கு வெளியே வைப்பது கெடுதி. அதன் மணம் அசுத்தவாயுவை ஆக்ருஷிக்கு மியல்பினதாயிருப்பதே அதற்குக் காரணம். இப்படியிருப்பதால் நெடுநேரம் வெட்டிவைக்கப்பட்ட வெங்காயத்தைக் கறிவகைக்கு உபயோகிக்கும்போது அது கெட்டுப்போகும். ஈரவெங்காயம் வைக்கப்பட்டிருக்கும் அறை எப்போதுஞ் சுத்தமானதாயிருக்கும்.

A CURIOUS MARRIAGE ADVERTISEMENT.

**ஒரு விநோத விவாகம் விளம்பரம்.**—ப்ரான்ஸ் தேசத்துள்ள பாரிஸ்நகரத்தில் பிரசுரமாகும் பத்திரிகையொன்றில் பன்னீராயிரத்துஐந்நூற்று நாற்பத்து நான்கு வகைத்தபால் தலைகள் சேர்த்து வைத்திருக்கும் ஒருவன் அவ்வாறு பல வகையான தபால் தலைகளைச் சேர்த்து வைத்திருக்கும் பெண்ணைக் கலியாணஞ்செய்து கொள்ளப் போவதாக விளம்பரம் செய்திருக்கின்றான். அப்பெண் சேர்த்து வைத்திருக்கும் தபால் தலைகள் 1847-ம்வருஷத்தில் பிரசுரமாய் மோரிஸ் நகரத்து நீலவர்ண தபால் தலைகளாயிருக்க வேண்டுமாம்.

A FAITHFUL WIFE.

**பர்த்தாவைக் காத்த பத்தினி.**—கீழிந்தியரெயில் வேட்ரைவருள் ஒருவரானபார்ட்டர் என்பவருடைய துடையை ஒரு சர்ப்பம் கௌவிக் கொண்டதாம், அவர், வலி பொறுக்கமாட்டாது பயத்தால், உள்ளே படுத்திருந்த தன் பத்தினியை உதவிக்குக்கூப்பிட, அவள் பரபரப்புடனோடி, துணிகரத்துடன் நாகத்தைத் துணித்து, உடனே தனது நாயகன் துடையில் எந்த விடத்தில் பாம்பு தீண்டிற்றோ அவ்விடத்தில் தன்வாயை வைத்து விஷத்தை யுறிஞ்சி, உமிழ்ந்தாளாம். பிறகு ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்ட பார்ட்டரும் சுகமடைந்தாராம். நற்காலத்திற்கு அடையாளமாக மிஸ் பார்ட்டருடைய வாயில் புண்ணில்லாததால் அவள் தப்பித்தாள். இது வல்லோ பத்தினித்தனம்?

CARE OF CHILDREN.

**குழந்தைகளை பரிபாலித்தல்.**—சிசுக்களைப் பரிபாலிப்பதில் வெவ்வேறு நாட்டால் பலவித வழக்கங்கள் அனுசரிக்கப்பட்டுவருகின்றன. ஸ்பெயின் தேசத்திலே சிறு சிசுக்களுக்கு அதிர்ஷ்டம் பெருகும் என்று நினைத்து ஒருவித மரக்கிளைகளை யொடித்து அவைகளால் அவைகளின் முகத்தில் தடவுகிறார்களாம். ஐர்லாந்தில் சில பாகங்களில் குழந்தைகளுக்கு ஆபத்துவரா வொட்டாதிருக்க பெண்கள் மயிரை அவைகளைச் சுற்றி கட்டிவைக்கிறார்களாம். ஹாலந்து தேசத்தில் புதிதாய்ப் பிறந்த குழந்தை படுத்துறங்கும் தொட்டிலில் வெள்ளுள்ளி, உப்பு, அப்பம், முதலியவற்றை வைத்து வைக்கிறார்களாம். க்ரீக் ஸ்திரீகள் தங்கள் குழந்தைகளை தொட்டிலில் வளர்த்தும்போது நெருப்பின் முன்னே மூன்று தரம் சுற்றுகிறார்களாம். இதனால் அவர்கள் கெட்ட காற்று கிட்டவொட்டமாட்டாதென எண்ணுகிறார்களெனத் தெரியவருகிறது.

A REFORM MARRIAGE.

**ஒருஆசார சீர்திருத்தமான கலியாணம்.**—திருவல்லிக்கேணியில் வஸித்துப் பேர் பெற்ற ஹைகோர்ட் வக்கீலாகிய காலஞ்சென்ற ராஜா ராமாராவின் பௌத்திரியும் 19 வயதானவளுமாகிய ருக்மணி அம்மாளை டாக்டர் ஏ. லக்ஷ்மிபதி அம்ஞ்சிக்கரையில் ஸமீபத்தில் விவாஹம் செய்துக்கொண்டாரென்று சந்தோஷப்படுகிறோம். டாக்டர் லக்ஷ்மிபதி வயித்தியத்தில் நல்ல பேர் வாங்கியிருக்கிறவர். ஹிந்து விவாகத்திருத்த சபையின் ஸெக்ரிடரிகளில் ஒருவர். தெலுங்கு பாஷையில் ஸாமார்த்திய முள்ளவராய் அதன் அபிவிருத்திக்காக பாடுபடுகிறவர். ருக்மணியம்மாள் மதராஸ் பிரஸிடென்ஸி காலேஜில் ஜூனியர் இன்டர்மீடியேட் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறார்.

SHAVING WIDOWS.

**விதவைகளை அவலக்ஷணமாக்குதல்.**—நமது நாட்டில் நடக்கும் துராசாரங்களில் இதுவுமொன்று. புருஷன் இறந்தபிறகு பெண்கள் மொட்டையடித்துக்கொண்டுவெள்ளைப்புடவையுடுத்துநிற்க வேண்டுமென்று எந்த சாஸ்திரம் சொல்லுகிறதோ அறியோம். இந்தியாவின் புராதன சரித்திரத்தை

ஆராய்ச்சி செய்யும்போது ஆதியில் பிராம்மண மதம் தலைதூக்கி நின்று, பிறகு பௌத்தமதத்தில் அதன் பெருமை குன்றிப்போய், பிறகு பல நூற்றாண்டுகளுக்கப்பால் மீண்டும் பிராம்மண மதம் தலைதூக்கி உலகத்திற் பரவ நேரிட்டதென்று அறிகிறோம். அப்படிப் பரவிய காலத்தில் பௌத்தமதத்தில் ஸ்திரீகளும் மொட்டையடித்துக்கொண்டு சந்நியாசினிகளாய் இருந்தார்களானதால், அந்த வழக்கத்தைத் தழுவி விதவைகளான மாதர்களையும் அப்படி மொட்டையடித்துக் கொள்ளும்படி பழக்கப்படுத்தி சந்நியாஸ ஆசிரமத்தின் நிலையில் இருக்கும்படி செய்திருக்கக் கூடுமோவென்று சந்தேகிக்க நேரிடுகின்றது. இவ்வாறு மொட்டையடித்து அவலக்ஷணப்படுத்தல் விசேஷமாகப்பிராமணர்கள், கோமுட்டிகள் முதலியவர்களிடத்துக் காணப்படுகின்றது. பிராமணர்களிலேயே தென்கலை வைஷ்ணவ வகுப்பார் மொட்டையடிக்கிற வழக்கமுள்ளவர்களாக இருக்கவில்லை. அப்படி அவலக்ஷணப்படுத்தாத காரணத்தால் அவ்வகுப்பு மாதர்கள் குல ஒழுக்கம் தவறிப்போகவுமில்லை. உலகத்தாரும் அவர்களைத்தாழ்வாக மதித்துவிடவில்லை. இது நிற்க, இப்போது பட்டு நூற்காரர்களெல்லோரும் சௌராஷ்டிரப் பிராமணர்களென்று சொல்லிக்கொண்டு தங்களின் 'செட்டியார்' என்ற பட்டத்தை "ஐயங்கார், ஐயர், ஆசார்லு" என்று மாற்றிக்கொண்டு வருவதில் அவ்வகுப்பாரிலும் சிலர் பிராம்மண வழக்கத்தைத் தழுவி விதவைகளை அலங்கோலப்படுத்த முயல்வதைக்காண்கிறோம். இந்ததுர்வழக்கத்தை எப்படியேனும் அடக்கிவிடவேண்டுமென்று ஆனரபில் ஜஸ்டிஸ் சங்கரன் நாயரவர்கள் போன்ற மேதாவிகள் கவலைப்பட்டும், எழுதிக்கொண்டும், பேசியும் வருகையில் சௌராஷ்டிரப் பிராமணர்களான பட்டு நூற்காரர்கள் தங்களில் இதுகாறுமில்லாத இந்த வழக்கத்தை அநுசரிக்கப் பார்ப்பது விவேக பக்ஷமாக மாட்டாது. இந்தியாவைப் பரிசுத்தப் பூமியென்கிறோம். அது புராதனகாலத்தில் பெற்ற கௌரமான இந்தப்பெயரை எந்தக்காலத்தில் அடைவதற்குரித்தானதாக நிற்குமோ ஈசனே அறிவார்.—**திராவிடாபிமானி.**

THEIR MAJESTIE'S JEWELS.

**ராஜதம்பதிகளின் நகைகள்.**—டெல்லி தர்பார் ஸமயத்தில் சக்ரவர்த்தியாலும் சக்ரவர்த்தினியாலும் தரித்துக் கொள்ளப்படும் க்ரீடங்கள் ராஜதம்பதிகளின் மற்ற அரண்மனை ஆபரணங்களோடு ஆபரணப்பாதுகாவலர் வசம் இருக்கின்றன. மெடீனு ஸ்டீமரில் அப்பாதுகாவலருக்கு ஒரு தனி அறை கொடுக்கப் பட்டிருக்கிறது. இந்தியாவில் சூட்டிக் கொள்வதற்கென்று தனியாக க்ரீடம் எதுவும் ராஜ தம்பதிகளால் கொண்டுவரப்பட வில்லை. ஆதலால் இந்திய மகுடாபிஷேகத்துக்காக வேண்டிய தனி முடி இந்தியாவிலேயே செய்யப் பட்டிருத்தல் வேண்டுமென ஊகிக்கப்படுகிறது. மேரி சக்ரவர்த்தினி வைரக்கற்கள் பதித்திருக்கும் தம்முடைய க்ரீடத்தையே இந்தியாவிலும் தரித்துக்கொள்ளுவாராம். இந்த க்ரீடம் மிக விசித்திரமான வேலைப்பாடுடையதும், ஸமீபத்தில் லண்டனில் மன்னருக்கு முடி சூட்டப்பட்டபோது மேரி அரசிக்கென்று தனியாகச் செய்யப்பட்டதுமான ஒப்புயர்வற்ற க்ரீடமாகும். இந்த மகுடத்தின் நடுவில் எத்தேசத்தாராலும் வியந்து பாராட்டப்படுவதும், இந்தியாவிலிருந்து கொண்டுபோகப்பட்டதுமான "கோஹினூர்" என்னும் பெயருடைய வைரக்கல் கோடிசூரியப் பிரகாசம்போல் ஜொலித்துகொண்டிருக்கிறது. இந்தியாவிலிருந்து கொண்டுபோகப்பட்ட இவ்வுயர்ந்த வைரம்பதித்த க்ரீடத்தை இந்தியாவில் அரசி சூட்டிக்கொள்வது இந்தியாவுக்கு ஒரு விசேஷமென்றே சொல்லவேண்டும் இந்த க்ரீடம் அரசருடைய அரண்மனை ஆபரணங்களுடன் சேர்த்து வைக்கப்படுவதில்லை. ஏனெனில் இந்த வைரத்தைப் பெண்கள் அணிந்துகொண்டால் அதிர்ஷ்டம் பெருகுமென்றும், ஆண்கள் அணிந்துகொண்டால் துரதிர்ஷ்டமும் கஷ்டமும் நேருமென்றும் பாரம்பரியமாய் ஒரு கதை இந்தியாவில் வழங்கிவருகிறது. தர்பாரின்போது சக்ரவர்த்தினியார் உடுத்துக்கொள்ளும் மகுடாபிஷேக உடை, லண்டன் மகுடாபிஷேகத்தின்போது அவர்களால் தரித்துக்கொள்ளப்பட்ட உடையேயாகும். ஆனால், அதில் சிற்சில மாறுதல்கள் இருக்குமாம். ராஜாங்க ஆபரணங்களைத்தவிர அரசியாருக்கே ஸொந்தமான வேறு சில நகைகளும் "மெடினு" ஸ்டீமரில் வருகின்றன. அவைகளுள் முக்கியமானவை வைரத்தினாலிழைக்கப்பட்ட ஒருதாமரைப் புஷ்பமும், ஆணி முத்துக் கழுத்தணியுமாம்.

# DEPARTMENTAL NOTES.

# பகுதிக் குறிப்புகள்.

## AGRICULTURAL NOTES.

## விவஸாயக் குறிப்புகள்.

MILK.

**பால்.**—கடைசி பால் மிக இனிப்பும்ருசியுமுள்ளது. இதில் வெண்ணெய் அதிகம். இது ஸாதாரணமாய் ஒவ்வொரு இடையனுக்கும் தெரிந்த விஷயம். முதலில் கறந்தபால் ஒரு கிளாசிலும் கடைசியாக கறந்தபால் ஒரு கிளாசிலும் வைத்துப்பார்த்தால், எதில் அதிக ஏடும் மேனியும் கட்டவதென்பதை சுலபமாய் அறியலாம்.

GERMINATION OF SEEDS.

**விதைகள் முளைத்தல்.**—ஸ்விட்ஸர்லாந்துதேசத்திய சாஸ்திரி யொருவர், விதைகளை விரைவில் முளைக்கும்படி செய்து ஏராளமான பலனைத் தரும்படி செய்யவும், கெட்டுப்போன விதைகளை மின்சாரத்து உதவியால் முளைக்கச் செய்யவும் கூடிய ஒரு விதயந்திரத்தைக் கண்டுபிடித்திருக்கிறாராம். இதன் சோதனை லண்டனில் நடக்கிறது.

PERIOD OF GESTATION.

**சினைப்பருவம்.**—அடியில்கண்ட மிருகங்களுக்கு புணரும் தேதிமுதல் ஈனும் தேதிவரையிலுள்ள காலம் பின்வருமாறு:—

| | | |
|---|---|---|
| குதிரை | .. | 340 நாள்கள் |
| பசு | .. | 283 ,, |
| ஆடு | .. | 150 ,, |
| பன்றி | .. | 112 ,, |
| நாய் | .. | 63 ,, |
| கோழி | .. | 21 ,, |

BREEDING BULLS.

**பொலிகாளைகள்.**—சில வருஷங்களுக்கு முன் பொலிஎருது விடவேண்டிய வயது விஷயமாக நிபுணர்களுக்குள் தர்க்கம் நடந்தது. கர்னல் மார் துரையவர்கள் 3, 3½ வயதுள்ள காளைகள்தான் லாயக்கென்றும் கர்னல் கன்துரையவர்கள் 2 வயதானவுடன் பொலிய விடலாமென்றும், 4 வயது வரையில் பொலியவிடாமலிருந்தால் கெட்டுப்போகுமென்றும் வாதித்தார்கள். கர்னல் கன் துரையவர்கள் அபிப்பிராயப்படி 2வயதானகாளைகளெல்லாம் பொலியிட லாயக்காகாது. இது சாதாரணமாய் வளர்க்கப்பட்ட மாடுகளில் எடுக்கமுடியாது. குடிப்பல் விழுந்து 2பல் போட்டவுடன் பொலியப்பருவமென்று திட்டமாய் அறிந்துகொள்ளலாம். பொலிஎருதை நல்ல ஸ்திதியில் வைத்திருக்கவேண்டும். 50, 60 பசுக்களுக்கு ஒரு காளை போதும். ஒரு பொலிஎருதை 5, 6 வருஷங்களுக்கு அதிகமாய் பொலியவிடக்கூடாது. இதை கட்டிவைக்கக்கூடாது. பசுக்கிடையில் விட்டுவிடவேண்டும். எருமைக்கிடாக்கள் 3½ வயதானால் பொலிக்கிடாவாக லாயக்காகிறது.

COCOANUT SEEDLINGS.

**தென்னம் பிள்ளைகள்.**—கரையான் தென்னம்பிள்ளையை அறித்துவிடாமல் தடுக்கக் குழியில் உப்புப்போட்டு அதன்மேல் தேங்காயை வைத்து குழியில் ஒரு முளைஇறுக்கி, தேங்காயை புரளாதபடி அம்முளையில் சேர்த்துக்கட்டவேண்டும். மண்ணுக்கும் தேங்காய்க்கும் சம்பந்தமிருக்கக்கூடாது. தென்னம்பிள்ளைவேர் செவ்வையாய்விட்டபிறகுமண்ணைக் குழியில் கொஞ்சம்கொஞ்சமாய் தள்ளிக்கொள்ளலாம். இந்த வேலையை தூரல தூறிக்கொண்டிருக்கும்பொழுது செய்ய வேண்டியது. வேறொரு முறை:—பசுவின் சாணத்தில் ரொம்ப உப்புப் போட்டு குழம்பாக்கி, அதில் கொஞ்சம் வீரத்தையும் பொடிசெய்துபோட்டு அதில்தேங்காயை நனைப்பது.

RANIPET MANURES.

**ராணிப்பேட்டை உரங்கள்.**—ஷண்முக முதலியார் வாலாஜா தாலூகா குடிமல்லூர் கிராமம் பின்வருமாறு எழுதுகிறார்.

சென்ற 1910-ஆ ஸெப்டம்பர்மீ நான் என் நிலத்தின் மாதிரி மண்ணை ராணிப்பேட்டை பாரி கம்பெனியாரிடம் காண்பித்து 4 ஏகருக்கு நெல் உரம்வாங்கி, 6 ஏகருக்குப்போட்டு பயிர் செய்தேன். பயிர் நன்றாய் வந்தது. பயிர் நோக்கத்தில் காணி 1-க்கு சுமார் 70 கலத்துக்குக் குறையாதென்று நினைத்தேன். பின்பாகத்தில் தண்ணீர் தட்டினல் பயிர் காய்ந்துவிட்டது. ஆனாலும் அக்கம் பக்கங்களில் எருப்போட்ட நிலங்களில் 20 மேனிக்கும், கம்பெனி

உரம்போட்ட கழனிகளில் 30 மேனிக்கும் கண்டு முதலாயிற்று. அதே நிலங்களில் இந்தவூ கண்டு முதலும் ரொம்ப் சிலாக்கியமாகவே யிருந்தது. இந்த என் அனுபோகத்தை மற்ற மிராசுதார்களும் தெரிந்து கொள்ளும் பொருட்டு தங்கள் அருமையான பத்திரிகையில் பிரசுரிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

INDIA AND COTTON CULTIVATION.

**இந்தியாவும் பருத்தி விவசாயமும்.**—இங்கிலாந்தில் லங்காஷயருக்கு முன்னைப்போல் இப்போ பருத்தி கிடைப்பதில்லை யென்று அதன் நண்பர்கள் விசனப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். லங்காஷயர் மாகாணத்தில் மான்செஸ்டர்பட்டணம் இருக்கின்றது. சில வருஷங்களுக்கு முன்னால் இந்த லங்காஷயர் உலகத்திற் செலவாகும் துணி நூல் முதலிய பஞ்சு ஸாமான்களைப் பெரும்பாலும் விற்று வந்தது. லங்காஷயரில் பருத்தி உண்டாவதேயில்லையாயினும் அதற்கு வேண்டிய பருத்திகளெல்லாம் இந்தியா முதலான அந்நிய தேசங்களிலிருந்து போய்க்கொண்டிருந்தன. இப்போது அன்னிய தேசத்தாரும் நூல்கள் துணிகள் முதலிய வற்றைச்செய்து விற்கத் தொடங்கி விட்டபடியால் லங்காஷயருக்கு வியாபாரம் குறைந்துபோனதுமன்றி, போதுமான பருத்தியும் கிடைப்பதில்லை. இதற்கு உபாயம் என்ன சொல்லப்படுகிறதென்றால் இந்தியாவில் பருத்திப்பயிருக்குக் கவர்ன்மெண்ட் பொருளுதவி செய்து அப்பருத்தி அதிகமாய் விளையும்படி செய்யவேண்டுமென்று சொல்லப்படுகிறது. பருத்திப் பயிர் செய்யப்படும் பூமியிலிருந்து அதிகமான பருத்தி விளையும்படியாயும், புதிதான பூமியில் பருத்திப் பயிர் செய்யும்படியாயும், கவர்ன்மெண்ட் உதவி செய்யவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இந்தியாவில் அதிகப் பருத்தி யுண்டானால் இந்தப் பருத்தியை லங்காஷயருக்கு அனுப்பலாமென்ப்படுகிறது. ஆனால் இதற்கு இரண்டு ஆட்சேபங்கள் நமக்குத் தோன்றுகின்றன. முதலாவது பருத்திஅதிக முண்டானால் அது இந்தியாவிலேயே செலவாகும். இரண்டாவது புதிதான நிலங்களில் பருத்திப் பயிர் செய்வதனால் இந்திய ஜனங்களுக்கு வேண்டிய தான்யாதிகளின் பயிர்குறைந்துபோகும்; லங்காஷயருக்கு வேண்டி இந்தியா பட்டினி கிடக்குமா?—சுதேசமித்திரன்

SUGAR CANE.

**கரும்பு.**—விவசாயச் சங்கங்களின் மெம்பர்களும் மற்றும் அநேகரும் அடிக்கடி விவசாய டிபார்ட்மெண்டாருக்கு விதைக்கணுக்கள் அனுப்பும்படி மனுச்செய்துகொள்ளும் பயிர்களில் இது ஒன்று. இப்படி அவர்கள் மனுசெய்துகொள்ளும்போதே அதன் செலவு என்னவாகுமென்று அவர்களுக்கு நிதானம் தெரிகிறதில்லை. கரும்புப் பயிர்செய்ய ஜாஸ்தி விடுமுதல் வேண்டும். அதாவது ஜாஸ்தி செலவு பிடிக்கும். கரும்புப்பயிர் பூசாரத்தை ரொம்பவும் கிரகிக்கிற குணமுடையதாகையால் அதற்கு ஜாஸ்தி எரு தேவை. இந்தப்பயிரை சரியானபடி சாகுபடி செய்யத்தெரிந்த கிருஷிகர், ஒரு ஏக்கர் கரும்புப் பயிருக்கு சுமார் ரூபாய் 50 முதல் 70 ரூபாய் பிரயமுள்ள முத்துக்கொட்டை புண்ணாக்காவது நிலக்கடலை புண்ணாக்காவது வாங்கி எருவாக உபயோகிக்கிறார்கள். இந்தப் பயிருக்கு சரியான நீர்வடிவும், கவனத்துடன் நீர்ப்பாய்ச்சலும் செய்யவேண்டியதவசியம். அநேக கிருஷிகர் கரும்புச் சாகுபடி செய்யும்போது இவ்விஷயங்களைக் கவனிக்காததால், அவர்களுடைய பயிர் ஏங்கி கறுகறுத்து வீரியமாய் வளராமல் வெளிறிப்போய் நோய்தாக்கியதுபோல் மஞ்சள் நிறமடைகிறது. அநேகமாய் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அப்பயிர் செய்திருக்குமிடத்தில் நீர்வடிவு சரியானபடி இல்லாமலிருப்பதாயும், பயிரில் கட்டியிருக்கும் தண்ணீரை வெளிப்படுத்த சாதனங்கள் சரியானபடி செய்யாமலிருக்கக் காண்பதுடன் சாதாரணமாய் அப்பேர்பட்ட பயிருக்கு அடிக்கடி ஜாஸ்தி ஜலம் பாய்ச்சுவதாயும் தெரியவரும். இப்படிப் பயிர் செய்பவர்கள் அந்தப் பயிருக்குப் போதுமானபடி ஆகாரமில்லாமலிருக்கும்படி செய்கிறார்கள். ஏனென்றால் நீர் வடிவில்லா நிலங்களில் கரும்புக்கு ஜாஸ்தி தண்ணீர் நிலத்தில் கட்டியிருப்பதால், அதன் வேர்கள் கீழே போக மார்க்கமில்லாமல், மேல் பரப்பிலேயே வந்துவிடுகிறது. நீர் வடிவுள்ள இடங்களிலோ வேர்கள் கீழ்நோக்கிச்சென்று ஜாஸ்தி இடத்திலிருக்கும் ஆகாரத்தை வேர்கள் அருந்த இடமுண்டு.

கரும்பு சாகுபடி செய்யும் நிலம் நீர்வடிவுள்ளதாயும் சரியானபடி எருப்போட்டதாயுமிருப்பதுடன் அதில் நட்டகரும்புப் பயிருக்கு வேண்டும்போது ஜலம் பாய்ச்சப்பட்டுவந்தால் அதில் தக்கபடி லாபம் கிடைக்கும்.

## INDUSTRIAL NOTES.
## கைத்தொழில் குறிப்புகள்.

THE MYSORE EXHIBITION.

**மைஸூரில் பொருட்காட்சி.**—போன தஸ்ராப் பண்டிகை சமயத்தில் மைஸூர்ப்பட்டணத்தில் நடந்த விவஸாயப் பொருள்களும் கைத்தொழில் பொருள்களும் அடங்கிய காட்சியானது முன் வருஷங்களின் காட்சியை விடச் சிறப்பாய் இருந்ததாம். காஷ்மீரம் முதலிய தூர தேசங்களிலிருந்தும் சென்னை மாகாணத்திலிருந்தும் பல கைத்தொழிற் பொருள்கள் காட்டப்பட்டன. விவஸாயப் பொருள் காட்டப்பட்டன. பல யந்திரங்களும் வந்திருந்தன. திரளான ஜனங்கள் வந்து பார்த்துப் போனார்கள். யுவராஜாவும் அரண்மனைக் காரியஸ்தர்களும் வந்திருந்தார்கள். கபர்த்தலா மகாராஜாவும் வந்திருந்தார்.

INDIAN INDUTRY.

**இந்தியக் கைத்தொழில்.**—இந்தியக் கைத்தொழிலின் அபிவிருத்தியை உத்தேசித்து மெஸ்ஸர்ஸ் சுரேந்திரநாத் பானாஜியும், கிருஷ்ணகுமாரமித்ராவும், ராதாசாரன்பாலும் ஒரு சுற்றுக்கடிதம் பிறப்பித்திருக்கிறார்கள். அதில் ஒரு ம்யூஸியமும் (காட்சிச்சாலை) கைத்தொழில் ஸம்பந்தமான பாங்கியும், டைரக்டரியும் அதாவது தொழிலாளிகள் வியாபாரிகள் முதலானவர்களுடைய விலாஸமடங்கிய ஒரு புஸ்தகமும் சுதேசி சேம்பர் ஆப் காமர்ஸும் ஸ்தாபிக்க உத்தேசித்திருப்பதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த முயற்சி வங்காளக் கவர்ன்மெண்டின் ஆதரணையையும் பெற்றிருக்கிறது.

THE MYSORE ECONOMIC CONFERENCE.

**மைசூர் பொருளாதாரக் கான்பரன்ஸு.**—மைஸூர் கவர்ன்மெண்டின் ஆதரவின்கீழ் சமீபத்தில் ஒரு பொருளாதார கான்பரென்ஸ் கூடிற்று. அதில் பின்வரும் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

(1) ஒரு கரும்பாலை ஸ்தாபிக்கவேண்டும். இதற்கு மாரிகண்ணி ஏரியிலிருந்து மின்சாரம் வழியாய் நீர் கொணர்ந்து வேலை நடத்தவேண்டும்.

(2) ஒரு ஸெண்டிரல் பாங்கியும், கல், ஓடு இவைகள் அறுக்கும் ஒரு தொழிற்சாலையும் ஸ்தாபிக்க வேண்டும். தேவநகரில் ஒரு பஞ்சுச்சாலையும் நெல்லுகுத்து மில்லும், அறுக்கும் மில்லும், பாசனத்திற்கு ஆயில் எஞ்சினும், காற்று எஞ்சினும் ஸ்தாபிக்க வேண்டும்.

(3) மைஸூர் டானரி கம்பெனி மூலமாய் ஜில்லா முழுமையும் தோல் கைத்தொழில் வேலையைப் பரவச் செய்யவேண்டும். கைத்தொழில் செய்யும் ஜனங்கள் சாப்பிடுவதற்கு சுகாதார முறையை அனுசரித்த ஹோடல்களையும் வீடுகளையும் கட்டவேண்டும்.

JACQUARD LOOM.

**ஜாக்கர்ட் தறி.**—மைஸூரில் தஸ்ராப் பண்டிகையின்போது நடந்த விவஸாயக் காட்சியில் ஜாக்கர்ட் தறியென்று ஒரு புதுத் தறி உபயோகப்படுத்தப்பட்டு அதனால் இரண்டு அங்கவஸ்திரங்கள் ஒவ்வொன்றும் 3 கஜ நீளமுள்ளதாய் நாலு நாளில் நெய்யப்பட்டது. மைஸூர் நெசவுக்காரர்கள் தங்கள் தறியினால் ஒரு நாளுக்கு $1\frac{1}{2}$ முழத்துக்கு அதிகம் நெய்ய முடியாதென்று சொல்லுகிறார்கள். அங்கிருந்து இந்த தறி கொள்ளேகாலத்துக்குக் கொண்டுபோகப்பட்டு, அங்கே அதனால் ஒரு நாளுக்கு $2\frac{1}{2}$ கஜம் நீளமுள்ள சேலை செய்யப்பட்டது. கொள்ளேகாலத்து நெசவுக்காரர்கள் தங்கள் பழைய தறிகளைக்கொண்டு முக்கால் கஜத்துக்கு மேல் நெய்யமுடியாது. இந்த ஜாக்கர்ட் தறி ஒன்று 150 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. இது உயர்ந்த தறியாயிருந்தால் 300, 400 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. இப்படி விலை அதிகமாயிருப்பதால் ஸாதாரண நெசவுக்காரர்கள் இதை வாங்கி உபயோகித்தல் ஸாத்தியமல்ல. "ஹிந்து" ப்பத்திரிகைக்கு இதைப்பற்றி யெழுதும் ஒரு நிருபர் விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பது போல, நெசவுக்காரர்களுக்கும் கடன் கொடுத்து இந்த ஜாக்கர்ட் தறியை உபயோகிக்கும்படி செய்ய வேண்டுமென்று சொல்லுகிறார். சென்னை மாகாணத்துத் தொழில்களுக்கு மிஸ்டர் சாட்டர்ட்டன் அதிகாரியாயிருப்பதால் இந்தத் தறியைப்பற்றி அவர் கவனிக்கவேண்டும். இதைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டியவர்கள் மிஸ்டர் சாட்டர்டனுக்கு எழுதி அறிந்துகொள்ளலாம்.

## EDUCATIONAL NOTES.
## வித்யாவிஷயக் குறிப்புகள்.

SIR CHANDAVARKAR ON TEACHING.

**ஸர். என். சந்தாவர்க்கர் படிப்பிப்பதைப்பற்றி.**—சில தினங்களுக்கு முன்னே புனு மாணவர்களைப் பார்த்து ஸர். நாராயண சந்தாவர்க்கர்பேச நேர்ந்த போது பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் பிள்ளைகளுக்கு வெகுமதிகள் கொடுப்பதனுல் அவர்கள் தலை திரும்பிப்போவது போலவே அவர்களைத் தட்டிக் கொடுத்துப் பேசுவதும் அவர்களைக் கர்வம் கொள்ளும்படிச் செய்கின்றது. பிரம்புதான் அவர்களை நல்வழிப்படுத்துவதாகும் என்றும், தீமைசெய்வதை விட பிரம்படி அதிக நன்மையைச் செய்கிறதென்பதே தன்னுடைய உண்மையான கொள்கையாகுமென்றும் சொன்னுர்.

SWIMMING IN SCHOOLS.

**பாடசாலைகளில் நீந்தல் பயிற்சி.**—தலைச்சேரியின் பள்ளிக்கூடத்திலிருக்கும் குளத்தில் அநேக சிறுவர்களும், பெரியவர்களும் சென்ற சில வருஷங்களாக விழுந்து இறந்திருக்கிறுர்களாம். ஸமீபத்தில் பன்னிரண்டு பிராயமுள்ள சிறுவன் ஒருவன் அக்குளத்திற்கு இரையாயினனும். இதற்குக்காரணம் சிறுவர்களுக்கு நீந்த தெரியாததே அனேகம் பிள்ளைகள் வாசிக்கும் பெரிய பள்ளிக்கூடங்களில் நீந்தக் கற்றுக் கொடுப்பதற்காகவே ஒரு குளம் வெட்டி, அதைச் செவ்வையாய் வைத்திருந்தால் தக்க ஆசிரியனைக் கொண்டு பிள்ளைகளுக்கு நீந்தல் கற்பிக்கலாம். அதல் பிள்ளைகள் அதிக நன்மையை அடைவார்களென்பதற்கு ஸந்தேக மில்லை. இதை வித்தியாதிகாரிகள் ஆலோசித்து ஆதரிப்பார்களென்று 'மெயில்' பத்திரிகைக்கு ஒரு நிரூபர் எழுதுகின்றுர்.

SCHOOL GARDENS.

**பாடசாலைத்தோட்டங்கள்.**— இலங்கையிலேபாடசாலைத்தோட்டங்கள் வரவர அதிகமாகின்றனவெனத்தெரிகின்றது. இப்போது இலங்கை முழுவதும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் 246. இத்தோட்டங்களில் மிகுதியானவை அரசாட்சிப்பாடசாலைகளோடேயே யமைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளில் 34 தோட்டங்கள் சென்ற வருஷத்திற் புதிதாயமைக்கப்பட்டன. இப்போது அரசாட்சிப் பாடசாலையாரைப்போலவே வேறுபாடசாலையாரும் இத்தோட்டங்களின் அவசியத்தைப்பற்றி நன்கு உணருகிறுர்கள். அதனுல் இவ்வருஷத்திலே வடமாகாணத்திலும் புதிதாய் சிலபாடசாலைகளோடு தோட்டங்கள் அமைக்கப்படலாயின. கிருஷிசங்கத்தவர் கிருஷித்தொழில் ஸம்பந்தமாய் தற்போது நடப்பித்துவரும் விசேஷபயிற்சிகளும், அவைகளாலுண்டாகும் பெரிய அனுகூலங்களுமே எங்கும் இவ்விஷயத்தில் அதிக அவாவையுண்டாக்கிவருகின்றன.

PACHIAPPA'S COLLEGE.

**பச்சையப்பா காலேஜ்.**—சென்னப்பட்டணம் பச்சையப்பன் மண்டபத்தில் ஸமீபத்தில் சென்னை கவர்னர் ஸர் தாமஸ் கிப்ஸன் கார்மிகேல் வந்திருந்து அக்கிராசனம் வகித்து வெற்றிப்பட்ட மாணவருக்குப் பரிசளித்தார்.

மிஸ்டர் ஜஸ்டிஸ் சுந்தர ஐயர் 69-ம் வருஷோத்ஸவப்பத்திரிகையைப் படித்தார். அதன் முடிவில் பச்சையப்ப முதலியாரின் கீர்த்திவாழ்கவென்று வாழ்த்துக் கூறி முடித்தார்.

பிறகு அக்காலேஜுக்கு நன்கொடை யளித்தவரின் பெயரையும் தொகையையும் குறிப்பிட்டார்.

| | |
|---|---|
| மிஸ்டர் பாலகிருஷ்ண மேட்டா | 30,000 |
| மிஸ்டர் வி. பி. ராமஸ்வாமி ஐயர் | 15,000 |
| ஆனரபில் மிஸ்டர் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் | 5000 |
| சேலம் கோதாவரி | 4000 |
| மிஸ்டர் எஸ். சீனிவாஸ ஐயங்கார் | 2000 |
| ,, கே. ,, | 1000 |
| குனும்பேட்டை ஜமீன்தார் | 1000 |
| திருவாவடுதுறைத் தம்பிரான் | 1000 |
| வெங்கடாஜலம் செட்டி அண்டு கம்பெனி | 1000 |
| கால்வ அபரஞ்சி அம்மாள் செங்கல்வராய நாயகரின் பெற்றோரிழந்த பாலர்களின் ஸம்ரக்ஷணை ஆசிரமத்துக்கு | 10,000 |

பச்சையப்பா ஹோஸ்டலுக்கு மெஸ்ஸர்ஸ் கிங் அண்டு கம்பெனியார் நாற்காலி முதலிய சாமான்கள் கொடுப்பதாகச் சொன்னுர்கள்.

மிஸ்டர் ஜஸ்டிஸ் சுந்தர ஐயர் தமது பெயரை விட்டு விட்டபடியால் அவர் இதற்கு 5000 ரூபாய் கொடுத்திருக்கிறதாக திவான்பகதூர் பி. ராஜரத்ன முதலியார் சொன்னுர்.

பிறகு கவர்னர் பிள்ளைகளுக்குப் பரிசளித்துவிட்டு ஒரு நீண்ட ப்ரசங்கம் செய்தார்.

## SCIENTIFIC NOTES.
## சாஸ்திரீயக் குறிப்புகள்.

COPPER VESSELS.

**தாமிர பாத்திரங்கள்.**—"நம்முடைய கண்ணுக்குத் தெரியாமலும் தேகத்தில் சேர்ந்தால் விஷத்தைக் கொடுக்கக் கூடியவுமான கிருமிகள் தீர்த்தத்தில் இருக்கின்றன. அந்தத் தீர்த்தத்தைத் தாமிரப் பாத்திரத்தில் எடுத்தால் கிருமிகளெல்லாம் செத்து ஜலமும் சுத்தமாய்ப் போய்விடுகிறது. மேலும் தாமிரத்தில் தீர்த்தம் அருந்தினுல் காலரா, மலேரியா முதலிய வியாதிகள் அணுகா. இங்கிலாந்தில் அநேக சாஸ்திர விற்பன்னர்கள் செம்புக்கு இன்னும் என்ன சக்தியிருக்கிறதென்பதை பார்க்க வேண்டி இன்னும் அநேக விதமான வியாதிகளுக்கு கூட அதில் திராவகம் செய்து கொடுத்து அதற்குண்டான குணங்களை வெளிப்படுத்தியிருக்கிறார்கள். ஒரு கோடி காலன் ஜலத்தை சுத்தி செய்ய இங்கிலீஷ் நாணயமாகிய $\frac{1}{4}$ கிரௌன் எடை செப்புத் திராவகத்தை ஜலத்தில் கலந்தால் சுத்தமாய்ப் போய்விடுகிறதாம். ஓர் ஊரில் காலரா அதிகமாய் நடமாடிக் கொண்டிருந்தது. அந்த ஊரின் தெருக்களில் மேற்சொல்லிய திராவகத்தைத் தெளிக்கவே காலரா நின்றுபோய்விட்டது. சீனர்கள் என்ன அசங்கியமாய்க் குடியிருந்தபோதிலும் அவர்களைக் காலரா அணுகாததற்குக் காரணம் அவர்கள் தீர்த்தத்தைத் தாமிரப் பாத்திரங்களில் வைத்துக்கொள்வதேயாம்."

DANGER TO AIR SHIPS AND BALLOONS.

**ஆகாசக் கப்பல்களுக்கும் புகைக் கூண்டுகளுக்கும் விபத்து.**—பூர்ண சந்த்ரோதயத்தில் பா. நா. எழுதுகிறார்:—

வாயுமண்டலம் பூமியைச் சுற்றி நாற்பத்தைந்து முதல் 50மைல் வரை பரவியிருக்கின்றது. ஆனல், அதில் அமைந்துள்ள வாயு திரவியம் ஒரேமாதிரியாய்ப் பரவியுள்ளதன்று. பூமிக்குச் சமீபத்தில் நெருக்கமாகவும், உயர உயர மெலினமாகிக்கொண்டும் பரவியுள்ளது. வாயுவானது ஜலத்தை விட அதிக நெகிழ்ச்சியுள்ளதாகவும் மையானதரகவுமிருக்கிறது. வாயுமண்டலத்தில் ஒட்டைகள் சில சில இடங்களில் காணப்படுகின்றனவாம். சிற்சில மாதங்களில் அதிக வெப்பத்தினுல் எவ்விதக் காற்றுமில்லாத சமயத்தில் சுழல் காற்று ஏற்பட்டு வைக்கோல், எச்சில்கலை, சில சமயத்தில் கோழி முதலியவைகளைக்கூடச் செங்குத்தாய் ஆகாயத்தில் கொண்டுபோகின்றன. இவ்விதமாகவே சமுத்திரத்திலும் திடீரென, ஜலமானது எழும்பி ஸ்தம்பம்போல் ஆகாசத்தில் கிளம்புவதையும் பார்க்கின்றோம். இதற்கு வாடர் ஸ்பௌட் என்று ஆங்கிலத்தில் பெயருள்ளது. இவ்விரண்டிற்கும் காரணம் ஒன்றே. அதாவது அதிக உஷ்ணத்தினுலாவது மற்றெந்தக் காரணத்தினுலாவது சிற்சில விடங்களில் காற்று திரவிய அணுக்கள் விலகி அகன்றுபோகவே "வாக்"யுவம் என்று சொல்லப்படும் காற்று திரவியங்கள் சூந்யமான பிரதேசங்கள் உண்டாகின்றன. அப்பிரதேசங்களைச் சுற்றிச் சலித்துக்கொண்டிருக்கும் வாயு திரவியங்கள் லேசான வஸ்துக்களைப் பூமியினின்று கிளப்பி மேற்கண்ட சூந்யப் பிரதேசங்களின் வழியாய் மேலே கிளம்பும்படி செய்கின்றன.

இத்தன்மையான சூந்யப்பிரதேசங்கள் வாயுமண்டலத்தில் உயர்ந்த இடங்களிற் சம்பவிக்கின்றன. ஆகாசக்கப்பல்கள் அல்லது புகைக்கூண்டுகள் அப்பிரதேசங்களைச் சமீபிக்கவே, உயரத்தில் மிதக்கிறதற்கு ஆதாரமாயுள்ள ஆகாசத்திரவியம் பொய்த்துப்போகவே, அக்கப்பல்கள் சூந்யப் பிரதேசங்களாகிய ஒட்டைகளின் வழியாய் பூமியின் அகர்ஷணசக்தியின் கதி நோக்காய் மகாவேகமாய்ப் பூமியில் தாக்கிச் சின்ன பின்னமாகும்படி விழுகின்றன. எவ்வளவுக் கெவ்வளவு இக்கப்பல்கள் அதிக பாரமுள்ளதாகவும் கனமுள்ளதாகவுமிருக்கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு பூமியில் விழும் வேகமும் அபாயமும் அதிகம். இச்சூந்யப் பிரதேசங்களைச் சமீபிக்கிற ஆகாசக் கப்பல்களின் கண்ணுள்ள சாமான்களின் பளுவைக் குறைத்தல் நலம். இச்சூந்யப் பிரதேசங்களை யணுகுங்காலத்தில் வாயுவின் பாரத்தை யளக்கும் கருவியில் உள்ள பாதரஸ ஊசியானது திடீரென்று முன்னிருந்த உயர்ந்த நிலையை விட்டுக் கீழிறங்கிச் சமநிலையைப் பெறுவதாகும்.

## MEDICAL NOTES.

## வைத்தியக் குறிப்புகள்.

---

PULSE.

**கைநாடி.**—நல்ல ஸுகசாலியின் கைநாடி நிமிஷமொன்றுக்கு 2 முறையடிக்குமாம்.

RED TURBANS.

**சிவப்பு தலைகுட்டைகள்.**—வெயிலில் அலைகிறவர்களுக்கு சூரிய ரஸ்மியால் காய்ப்புண்டு மூளை மயங்கியும் சிற்சில ஸமயங்களில் அவர்களுக்குப் பிராண ஹானியும் ஸம்பவிக்கக்கூடியதா யிருக்கிறது. நல்ல குதிரைகள் சூரிய வெப்பம் தாங்காமல் சுருண்டு விழுந்து மாய்கிறது முண்டு. இதை தடுக்கச் சிவப்பு உருமால் கட்டுதலும், சிவப்புத் தொப்பி போடுதலும், நலமென்று ஒரு அறிஞர் கண்டு பிடித்து அநுபவஸித்தமாய் ருசுப்படுத்தி யிருக்கிறார்.

SLEEP.

**நித்திரை.**—நாம் ஸாதாரணமாக இரவில் 10-மணிக்கு நித்திரை செய்ய ஆரம்பித்து காலையில் 5-மணிக்கோ அல்லது 6-மணிக்கோ எழுந்திருக்கிறோம். நாம் தேகஸௌக்யத்துடனும், பலத்துடனுமிருக்கவேண்டுமானால் மேற்சொல்லியபடி நித்திரை செய்யக்கூடாதாம். 10-மணிக்கு நித்திரைக்குச் சென்று 6-மணிக்கு எழுந்திருக்கிறதற்குப் பதிலாக, பின்வருமாறு இதை இரண்டு பாகங்களாகப் பிரித்துக் கொள்ளவேண்டும். அதாவது 6-மணியிலிருந்து 8½-மணி வரைக்கும் ஒருபாகம். இரவு 2-மணியிலிருந்து காலையில் 6½-மணி வரைக்கும் மற்றொரு பாகம். இவ்விதம் நித்திரை செய்துவந்தால் மூளை ஸம்பந்தமாக உழைப்பவர்களுக்கு உற்சாகமும், பலமும், அதிகரிக்குமாம். இவ்விஷயத்தில் அநுபமுள்ள ஒரு வைத்தியர் இவ்வித அபிப்பிராயப்படுகிறார். இவ்விதம் மூளை ஸம்பந்தமாக யோசனை செய்பவர்கள் நித்திரை செய்யும் காலத்தை இரண்டு பாகமாகப்பிரித்து நித்திரை செய்துவந்தால் அவர்களுக்கு இவ்விதம் செய்வதின் பிரயோசனம் புலப்படுமென்றும் சொல்லுகிறார். ஒரே தடவையில் 8-மணி காலம் அல்லது 9-மணி காலம் தூங்குவது தேகாரோக்யத்திற்கு மிகவும் கெடுதலாம்.

EPIDEMIC DIARRHOEA AND FLIES.

**பெருவாரியான வயிற்றுப் போக்கும் ஈக்களும்.**—குளிர்காலத்தைக் காட்டிலும், வெயில் காலத்தில் பெரும்பாலும் குழந்தைகளுக்கு வயிற்றுப்போக்கு உண்டாகிறது. பட்டண வாசங்களில் வெயில் காலத்தில் ஈக்கள் பாலில் கூட்டம் கூடி, பாலை விஷமாக்கி விடுகிறது. நமது தேசத்துப் பெண்கள் பாலில் ஈக்கள் விழுந்திருந்தாலும் அவைகளை எடுத்தெறிந்து விட்டு அப்பாலை குழந்தைகளுக்கு போட்டுகிறார்கள். இச்சின்ன ஜெந்துக்களுக்கிருக்கிற விஷம் அவர்களுக்கு தெரிகிறதில்லை. குதிரைகள் ஜாஸ்தியாயிருக்கிற ஊர்களில் ஈக்கள் பாதை ஜாஸ்தி.

பாலை ஒருக்காலும் திறந்து வைக்கக்கூடாது அப்படி வைத்தால் தூசிபடுவதுமல்லாமல் ஈக்களினால் நேரிடும் கெடுதியும் உண்டாகும். குழந்தைகளை செங்காயான அல்லது அழுகின பழங்களை தின்க விடக்கூடாது.

EATING AFTER FASTING.

**பட்டினிகிடந்து சாப்பிடுதல்.**—நமக்குள் சில தினங்களில் பட்டினி யிருப்பது வழக்கமல்லவா? அந்நாட்களில் பட்டினி யிருந்து பின்பு பலகாரமாவது அல்லது வேறு எந்த ஆகாரமாவது சாப்பிடும்பொழுது வயிறு நிறைய பூரண ஆகாரம் செய்யக்கூடாது. ஸாதாரணமாக பட்டினி யிருந்தால் ஆகாரத்தில் ஒருவித ஆசை ஏற்படுகிறது. அநேகர்கள், காய்ந்த மாடு கம்பில் பாய்ந்ததுபோல், பட்டினியிருந்து பிறகு விழுந்து, விழுந்து தின்றார்களே? அவ்விதம் செய்வது பெருங்கேட்டை விளைவிக்கும் தன்மையுள்ளது. திடீரென்று மரணம் ஸம்பவிக்கும். இதற்கு அத்தாக்ஷியாக, வெல்லிங்டன் என்ற பிரபு, வெகு நேரமாக பட்டினி யிருந்து, பிறகு நிரம்பவும் ஆசையோடு, நேர்த்தியான ஆகாராதிகளை மிதமிஞ்சி சாப்பிட்ட உடன் இறந்து போனார். ஆகையால் விரதாதி நாட்களில், பட்டினி யிருந்தால், பிறகு அதிகமாக, புஷ்டியான ஆகாரங்களை உட்கொள்ளாமல், மிகவும் இலேசான ஆகாரங்களைக் கொஞ்சமாக உட்கொள்ளவேண்டும்.

## LEGAL NOTES.
## சட்டக் குறிப்புகள்.

PARTNER SHIP.

**கூட்டுவியாபாரம்.**—ஒரு ஹிந்து தகப்பனும் அவருடைய புத்திரர்களும் சேர்ந்து நீலி வியாபாரம் செய்து வந்தார்கள். தகப்பனர் மானேஜிங் மெம்பர் ஸ்தானத்தில், நீலி மருந்து அனுப்புவதில் ஏதேனும் குறைவு பட்டால் தாம் ஈடு படுத்துவதாக வாதியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார். இந்த ஒப்பந்தத்திற்கு பிறகு புத்திரர்களிலும் ஒருவன் விபக்தம் செய்து கொண்டு தனியே வந்து விட்டான். வாதி இந்த புத்திரனையும் சேர்த்து நஷ்டத்திற்கு வியாஜ்யம் கொண்டு வந்தபோது, புத்திரன் குடும்ப ஸொத்தில் எவ்வளவு பெற்றுக் கொண்டானே, அதற்குத் தகுந்தபடி பிரஸ்தாப நஷ்டத்திற்கும் வீதாச்சாரம் கொடுக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

REMISSION OF COURT FEES.

**கோர்ட்டு பீஸ் தள்ளுபடி.**—1889ளுத்து சென்னை வில்லேஜ் கோர்ட்டு ஆக்ட்டுக்கு (1889-ம் வருஷத்து 1-வது ஆக்ட்டு) உள்ளடங்கிய சென்னை இராஜதானியிலுள்ள வில்லேஜ்கோர்ட்டுகளில் தாக்கல் செய்யப்பட்டு, அல்லது எச்ஸிபிட்டாக பதிவு செய்யப்பட்டு, அல்லது ரெக்கார்டு செய்யப்பட்டு அல்லது அவ்விதம் கோர்ட்டுகளால் பெற்றுக்கொள்ளப்பட்டு அல்லது ஷை கோர்ட்டுகளால் கொடுக்கப்பட்டுள்ள அப்ளிகேஷன்களுக்கும், மனுக்களுக்கும், நகல்களுக்கும் 1870ளுத்து கோர்ட்டு பீஸ் ஆக்ட்டின் பிரகாரம் செலுத்தியாகவேண்டிய கோர்ட்டு பீசுகளை ஷை 1870ளுத்து 7-வது ஆக்ட்டு 35-வது பிரிவுப்பிரகாரம் தனக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின்படி ஷை கோர்ட்டு பீசுகளை கவர்ன்மெண்டார் வாபஸ் செய்திருக்கிறார்கள்.

A CONTEMPT OF COURT CASE.

**கோர்ட்டாரை அவமரியாதை செய்ததாககேஸ்.**—சேலம் ஜில்லாவில் ஒரு அஸிஸ்டண்டு கலெக்டர் ஒரு கேஸ் விசாரித்துக்கொண்டிருக்கையில், கக்ஷிக்காரனொருவன் தன் வக்கீல் மறந்துவைத்துப்போன சட்டப் புஸ்தகங்களை எடுத்துப்போக உள்ளே நுழைந்ததாகவும், சாக்ஷியாகவாக்குமூலம் கொடுத்து நின்ற தன்னிஷ்டனைச் சைகைசெய்து அப்புஸ்தகங்கள் எங்கே என்று கேட்டதாகவும்; இது சரியல்லவென்று மாஜிஸ்திரேட்டுக்குத் தோன்றினதால், அவர் இவனைப் பிடித்து பிரமாண வாக்குமூலம் வாங்கி, சாக்ஷியுடன் பேசியதும், மாஜிஸ்திரேட்டை ஸலாம் செய்யாமலிருந்ததும் இந்த கோர்ட்டை அவமானித்ததாகுமென்று 3 ரூபா அபராதம் விதித்தார். இதன்மேல் அப்பீல் செய்ததில் இப்போது அது முடிவாகி, அபராதம் வாப்ஸானதாகவும், மாஜிஸ்ட்ரேட்டின் நோக்கம் தப்பென்று மேலதிகாரிகள் அபிப்பிராயம் கொண்டதாகவும் கேள்விப்படுகிறோம்.

AN ADOPTION AGREEMENT.

**ஒரு ஸ்வீகார உடன்படிக்கை.**—ஒரு ஸ்வீகாரத் தாயார், தன்னுடைய புருஷனின் ஸகல ஸொத்துகளையும் ஸ்வீகாரப்புத்திரனுக்குக் கொடுத்து விடுவதாகவும், ஆனல் சில ஸொத்துகளைமட்டிலும் தான் வைத்துக்கொள்வதாகவும், ஸ்வீகாரப் புத்திரனுக்கும் தனக்கும் பிடித்த மில்லாவிடில் தான் அந்த ஸொத்துகளைக்கொண்டு காலக்ஷேபம் செய்துவர உத்தேசித்திருப்பதாகவும் தன்னுடைய ஜீவதிசைக்குப்பிறகு இந்த ஸொத்துகளை தன்னுடைய ஸ்வீகாரப்புத்திரன் அடையவேண்டுமென்றும் ஷை ஸ்வீகாரப்புத்திரனின் ஸொந்த தகப்பனுருடன் ஒரு உடன்படிக்கை செய்து கொண்டாள். இந்த உடன்படிக்கை நியாயமானதாகவும் மனதிற்குப் பொருந்தினதாகவு மிருப்பதால் செல்லும்படியுள்ளதென்று தீர்மானிக்கப்பட்டது. இ. லா. ரி. 27 சென். 577. (புல் பெஞ்ச்)

RIGHTS OF ILLEGITIMATE SON.

**வைப்பாட்டி பிள்ளையின் பாத்தியம்.**—தகப்பன், சேர்ந்த குடும்பத்திலிருந்து விபக்தம் செய்து கொண்டு தனியே குடித்தனம் செய்து இறந்து போயிருந்தால், அவனுடைய வைப்பாட்டி மகன் அவனுடைய சொத்துக்கு வார்சு பாத்தியதை பாராட்டி அடையலாம். ஆனல் விபக்தம் செய்து கொள்ளாமற் மற்ற சகோதரர்களுடனுவது அல்லது தகப்பனுருடனுவது சேர்ந்து வஸித்து குடும்பம் சேர்ந்த குடும்பம் என்று சொல்லும்படியானதாகவிருந்தால், அந்த குடும்ப ஸொத்திற்கும் வைப்பாட்டி மகனுக்கும் யாதொரு பாத்தியதையும் கிடையாதென்று தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. விபக்தமாகாத தகப்பனுக்கு ஸொந்த புத்திரனிருந்தபோதிலும் ஸரி அல்லது அவன் வேறொரு புத்திரனை ஸ்விகாரம் எடுத்துக்கொண்டிருந்தபோதிலும் ஸரி, சேர்ந்த ஹிந்து குடும்பத்தில் வைப்பாட்டிக்கு பிறந்த மகனுக்கு பாத்தியமில்லை என்று தீர்மானித்திருக்கிறார்கள்.

## PERSONAL NOTES.
## மனுஷ்யர்களைப்பற்றிய குறிப்புகள்.

THE LATE BRAHMA SRI NARASIMHA BAGAVATHAR.

**காலஞ்சென்ற ப்ரம்மஸ்ரீ நரசிம்ம பாகவதர்:**— ப்ரம்மஸ்ரீ நரசிம்ம பாகவதர் பரகதி யடைந்தா ரென்று கேட்டு விசனிக்கிறோம். ஸம்ஸ்க்ருதம், தமிழ் தெலுங்கு இந்தப் பாஷைகளில் பாண்டித்தியம் அடைந்திருந்தார். நற்குண சீலர். பிரசித்தி பெற்ற தியாகைய்யரின் சிஷ்யர்களுள் கடைசியானவர். இவர் மரணத்தால் ஸங்கீத உலகத்திற்கே ஒரு குறை ஏற்பட்டதென்று சொல்லலாம்.

MR. V. S. SWAMINADA DIKSHITAR.

**மிஸ்டர். வி. எஸ் ஸ்வாமிநாத தீக்ஷிதர்.**—புதுச்சேரி கலோனியல் காலேஜில் இங்கிலீஷ் புரொபஸராக இருக்கும் மிஸ்டர் வி. எஸ். ஸ்வாமிநாத தீக்ஷிதருக்கு "ஆபீஸர் டி. அகாடமி" என்ற பட்டத்தைக் கொடுத்து ஒரு அபிஷிபல் கெஜட்டு பிரசுரமாயிருக்கிறது. இம்மாதிரி ஹிந்து கனவானுக்குக் கௌரவப்பட்டம் அளித்தது இதுதான் முதல் தடவை. மிஸ்டர் தீக்ஷிதர் சென்னை சர்வ கலாசாலை பட்டதாரி.

A GENEROUS GIFT.

**ஒரு நன் கொடை.**—பம்பாய்க் கவர்னர் ஸர் ஜார்ஜ் க்ளார்க்கின் பிரேரேபணையால் பம்பாயில் ஸ்தாபிக்கப்படப் போகிற சாஸ்திர ஆராய்ச்சிச் சாலைக்கு உதவியாகப் புஸ்தகசாலை யொன்று ஸ்தாபிக்க ராவ் ஸாஹிப் திரிகம் ஜி என்னும் பிரபு இரண்டரை லக்ஷம் ரூபாய் மேற்படி கவர்னர் வசமாய் நன்கொடையாகத் தந்திருக்கிறார். அப்புஸ்தகசாலையைத் தமது பேர்வைத்து வழங்கவேண்டுமென்றும், அதில் தமது உருவச்சிலை முதலியன இருக்கவேண்டுமென்றும், மேற்படி கவர்னரைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

A DECCAN SANDOW.

**ஹைதராபாத்து தக்கனம் ஸாண்டோ**—ஹைதராபாத்து ஸாண்டோ என்று பிரசித்திபெற்ற ப்ரொப்பஸர் புல்லு ராம ஜோகராவ், ஹைதராபாத்து நவாப், பித்தாபுரம் ராஜா, முனகாலா ராஜா, முதலியவர்களின் முன்னால் தன் விசித்திர பலத்தைக் காட்டி அனேக தங்கப் பதக்கங்களும், நற்சாக்ஷிப் பத்திரங்களும் கொடுக்கப் பெற்றார். இவர் அதிக வேகத்துடன் சென்றுகொண்டிருந்த 20 குதிரை சக்தியுடைய மோடார் வண்டி யொன்றை நிறுத்திவிட்டாராம். இவர் பிரம்ம குலத்தவர். வயது 25.

RAO SAHIB VASAMJI TRIKAMJI.

**ராவ் ஸாஹிப் வஸஞ்ஜி திருகஞ்ஜி.**—பம்பாய் கவர்னர் ஸர் ஜார்ஜ் கிளார்க்கின் பிரேரணையின் மேல் பம்பாயில் ஸ்தாபிக்கப்படப்போகிற சாஸ்திர ஆராய்ச்சி சாலையையொட்டி சாஸ்திர ஆராய்ச்சியில் உதவக்கூடிய புஸ்தகசாலை யொன்றை ஸ்தாபிக்க ராவ் ஸாஹிப் வசம்ஜி திரிகம்ஜி யென்பவர், $2\frac{3}{4}$ லட்சம் ரூபாய் கவர்னர் வசம் ஒப்பிவித்திருக்கிறார். அந்த புஸ்தகசாலையைத் தன் பேரிட்டு அழைக்க வேண்டுமென்றும், தமது உருவச்சிலை யொன்று அந்த புஸ்தக சாலையில் யாரும் பார்க்கக்கூடிய ஓரிடத்தில் வைக்கப்படவேண்டுமென்றும், அதன் அடியில் இன்ன காரியத்தைக்கருதி ராவ் சாகிப் வசம்ஜி திரிகம்ஜி பெரிய நன்கொடை கொடுத்து அந்த புஸ்தகசாலையை ஸ்தாபித்தாரென வரைந்திருக்கவேண்டுமென்றும், சொல்லியிருக்கிறார். அந்த நன்கொடையை வரப்பெற்று பம்பாய்க் கவர்ன்மெண்டார் அவருக்கு நன்று செலுத்தி யிருக்கின்றார்கள்.

KHAN BAHADUR NAOROJI PESTONJI.

**கான் பகதூர் நௌரோஜி பேஸ்டன்ஜி.**—ஆமதபாத்தில் பார்ஸி ஸ்திரீகளும் ஐரோப்பிய ஸ்திரீகளும் பிரசவிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் பிரசவ வைத்திய சாலையை யொட்டி இன்ன ஜாதியாருக்குத்தான் என்றில்லாமல் சகல வகுப்பு மாதர்களுக்கும் பொதுவாயிருக்கும்படியான ஓர் அறை கட்டிவிட ஆனரபில் கான்பகதூர் நௌரோஜி பெஸ்டோன்ஜி யென்ற பார்ஸி கனவான் ரூபா 40,000 உபகரித்திருக்கிறாரென்று தெரிந்து சந்தோஷிக்கிறோம். பம்பாய்க் கவர்ன்மெண்டார் அவர் உதாரகுணத்தை மெச்சி ஒரு கவர்ன்மெண்ட் உத்தரவு பிறப்பித்து அதன் மூலமாய் அவருக்கு நன்றி செலுத்தி யிருக்கிறார்கள்.

## FUN AND ANECDOTE.

## வேடிக்கையும் துக்கடாக்கதைகளும்.

NOT SO FOOLISH.

அவ்வளவு பைத்திய காரனல்ல :—

**கைதி.**—ஐயா! இந்தக் கேசுக்கு 1000 ரூபா அநியாயமாய்த்தோன்றுகிறது.

**வக்கீல்.**—நான் உன்னைப் பைத்தியக்காரனாக ரூபித்து, விடுதலை கிடைக்கப் பண்ணவில்லையா ?

**கைதி.**—ஆம். சரிதான். ஆனால் தங்களுக்கு 1000 ரூபா பீஸ் கொடுக்கத் தக்க அவ்வளவு பைத்தியகாரனாகி விட்டதாக ரூபிக்கவில்லையே.

WHOM AM I TO WED?

**யாரைக் கட்டிக் கொள்ளுகிறது.**—இருபத்தெட்டுப் பிராயமாகிறது, இன்னும் ஏதோ வொரு பெண்டாட்டியைக் கட்டிக்கொள்ளாமல் இப்படி எத்தனை நாள் துன்பப் படுவாய் என்று கங்கம்மாள் தன் மகனை கண்டித்துப் பேசினாள். "யார் பெண்டாட்டியை கட்டிக் கொள்ளச் சொல்லுகிறாய்?" என்று பெண்ணாசைகொண்ட பிள்ளை பளிச்சென்று சொன்னான்.

SANNYASAM.

**ஸந்யாஸம்.**—சாகும்தருணத்திலிருந்த ஒரு வைதிகப்பிராமணனண்டை பந்துக்கள் எல்லாரும் வந்து "சாஸ்திரிகளே தாங்கள் பெரியவாள், இந்தவியாதி வெகுநாளாய் உங்களை உபாதித்துக்கொண்டிருக்கிறது, ஸுகதுக்கங்கள் எல்லாவற்றையும் அனுபவித்த தங்களுக்கு ஒன்றும் குறைவில்லை, தாங்கள் ஸந்யாஸம் வாங்கிக்கொண்டால் நன்றாயிருக்குமென்று நாங்கள் அபிப்பிராயப்படுகிறோம்" என்று சொல்ல அந்த ரோகி "ஆகா ! அதற்கென்ன வாங்கிக்கொள்ளுகிறேன், பத்தியமென்ன" என்று கேட்டார்.

CUT OFF THE HEAD.

**தலையை வெட்டிவிட்டான்.**—ரோமா சக்ரவர்த்திகளில் வெகு குரூர சிந்தையுள்ள ஒருவர் ஒருநாள் இரவில் நாடகம் பார்த்துக் கொண்டிருந்தார். மேடையின்மீது பல வேஷக்காரர்களிருந்தார்கள். அதில் முந்தி நின்றிருந்த ஒருவன் நெட்டையரயிருந்தபடியால், அவனுக்குப்பின் நின்றிருந்த குள்ளனொருவனை மறைத்தான். அதனால் சக்ரவர்த்திக்கு அவன் தெரியவில்லை. உடனே அவர் தன் பக்கத்தில் நின்றிருந்த சிப்பாயைக்கூவி மெதுவாய் மேடைமேல் போய், நெடியோனுடைய தலையைச் சீவிவிட்டு வரும்படி உத்தரவளிக்க, அவனும்போய், அப்படியே செய்துவிட்டு வந்தான். பிறகு சக்கரவர்த்தி வெட்டுண்டு நின்றவனைக்கூவி, "அடே இனி நீ பதையாமல் ஆடு. இப்பொழுது உனக்குச் சரியான உயரமிருப்பதால், நீ யாரையும் மறைப்பது ஸாத்தியமன்று," என்று சொன்னாராம். கொடுங்கோன் மன்னருடைய சித்த விருத்தி இப்படிப் போகுமென்பதற்கில்லை.

A DOG'S SAGACITY.

**ஓர் நாயின் அறிவு.**—ஒரு நாள் ஈடன், என்னும் துரையொருவர் குதிரை ஸவாரி போனபோது தன்னுடன் கொண்டுபோயிருந்த கம்பளியை எங்கேயோ இழந்து விட்டார். அதை அவர் வீட்டுக்குத் திரும்பி வருவதற்குமுன் கவனிக்க வில்லை. இது இப்படியிருக்க, அன்று காலையில் அவருடைய நாய் எங்கெங்கோ திரிந்துவிட்டு அதிஷ்டவசமாய் அந்தக் கம்பளி விழுந்துகிடந்த வீதியில் நுழைந்தது. அது அந்தக் கம்பளியைப் பார்த்தவுடன், தன் எஜமானனுடைய தென்று அறிந்து, அதனருகிலேயே உட்கார்ந்து கொண்டு எஜமானனுடைய வரவை எதிர்பார்த்து கொண்டிருந்தது. அது அன்றெல்லாங் காத்திருந்தும் எஜமானன் வரவில்லை. அதனிடத்திலிருந்து கம்பளியைப் பறித்துக் கொள்ளும் பொருட்டு, அதற்கு இறைச்சித் துண்டுகள் முதலிய தின்பண்டங்களைக் கொடுப்பது முதலான வழிப் போக்கர் செய்த தந்திரங்களுக் கெல்லாம் அது இடங்கொடுக்காமல் வெகு நேரம்வரையில் காத்திருந்தது. பிறகு அவ்வழியாய்ச் சென்ற ஈடன் துரையின் சிநேகிதரொருவர் அந்த நாய் தம் சிநேகிதருடையது என்றறிந்து, துரை ஈடன் அவரிடம் போய்ச் சொல்ல தாம் வந்து கம்பளியை எடுத்துக் கொண்டு நாயையுமழைத்துக்கொண்டு போனார்.

## CURIOSITIES.

## விநோதங்கள்.

---

### BORE THREE CHILDREN.

**மூன்று குழந்தைகளைப் பெற்றாள்.**—தஞ்சாவூருக்கும் திட்டைக்கும் நடுவிலுள்ள கோடமங்கலம் என்னும் கிராமத்தில் ஒரு சூத்ர ஸ்திரீ நாளது நவம்பர் மாஸம் 15-தேதி ராத்திரி மூன்று குழந்தைகளைப் பெற்றதாக நம்முடைய நேயர் திட்டை டி. எஸ். சேஷாத்திரி ஐயங்கார் அவர்கள் தெரிவிக்கிறார். இரண்டு குழந்தைகள் பெண்ணும், ஒன்று ஆணும், தாயாரும் குழந்தைகளும் ஸௌக்யமாயிருக்கிறார்கள்.

### CAMELS THAT SMOKE.

**சுருட்டுப் பிடிக்கும் ஒட்டகங்கள்.**—ஆப்பிரிக்காவிலுள்ள மொரோகோ தேசத்தில் ஒட்டகங்களை வேலையில் பழக்க ஒரு தந்திரம் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஒரு முக்கோண வடிவமுள்ள துண்டுக் கட்டையில் ஒரு துளையிட்டு, அதில் ஒரு சுருட்டைக் கொளுத்தி வைத்து, ஒட்டகத்தின் வாயில் கொடுக்கிறார்களாம். அது புகையை மூக்கினால் விட்டுக்கொண்டே ஸாதுவாய்ப் போகும். சுருட்டு ஆய்விட்டால் திடீரென்று கோபத்தோடு நிற்கிறதாம். ஆகையால் சுருட்டு ஆக ஆக புதிதாய் வைத்துக் கொண்டே வருகிறார்களாம்.

### INTOXICATED FISH.

**குடிமயக்கங் கொண்ட மீன்கள்.**—பிராஞ்சு தேசத்தில் ஹெரோ என்ற மாகாணத்தில் பரோத்திஞ் என்ற ஊரில் தீர்வைச் சாவடி உத்தியோகஸ்தர்கள் 700 காலன் திராக்ஷ இரசத்தைப் பறிமுதல் செய்து ஒரு வாய்க்காலில் எறிந்துவிட்டார்கள். இதனால் மீன்கள் போதைகொண்டு ஜலத்தின்மேல் மிதந்து கொண்டிருந்தன வென்றும், ஜனங்கள் மிகச் சுலபமாய் அவைகளைப் பிடிக்கக்கூடுமா யிருந்ததென்றும் பாரீஸ்பட்டணத்துப் பத்திரிகைகள் கூறுகின்றன. வீட்டுஸ்திரீகள் இவ்வளவு சுலபமாய் மீன் கிடைத்தபடியால் கடைக்குப் போகாமலே மச்சம் சம்பாதித்துக் கொண்டார்கள். அதனால் மீன் வியாபாரிகள் தீர்வைச் சாவடி உத்தியோகஸ்தர்களால் தங்களுக்கு நேர்ந்த நஷ்டத்தைக் கவர்ன்மெண்டு ஒத்துக்கொடுக்க வேண்டுமென்று விண்ணப்பம் பண்ணியிருக்கிறார்களாம்.

### A VALUABLE APPLE TREE.

**விலை யுயர்ந்த ஆப்பிள் மரம்.**—வாஷிங்டன் என்னும் பட்டணத்திலுள்ள சிலான் ஏரிக்குச் சமீபத்தில் ஒரு ஆப்பிள் மரம் ஆறாயிரம் பவுன் விலைக்குக் கேட்கப்பட்டது. அம்மரச் சொந்தக்காரர் அம்மரம் பெரியதாய் அதன் பழங்களை சந்தையில் விற்றாலே அதிகப்பணம் வருமென்று நினைத்து, விலைக்குக் கொடுக்க சம்மதிக்கவில்லை. அந்த மரம் இருபது வருஷத்துக்கு முந்தி ஒரு இந்தியனால் பயிரிடப்பட்டு விர்த்திக்குக் கொண்டு வரப்பட்டதாம். இதன் பழம் மஞ்சள் நிறமாம். அநேக நாட்கள் கெடாமலிருக்கின்றதாம். ஸ்போகேன் என்னுமிடத்தில் ஆப்பிள்பழக் காட்சியில் இம்மரத்தின் ஆப்பிளுக்கு முதன்மையான பரிசுகிடைத்ததாம்.

### THE BURMAN.

**பர்மியன்.**—சட்டி மாதிரியான ஒருவகைத் தொப்பியைத் தலையில்தரிக்கிறார்கள். அத்தொப்பிகளில் அவர்களுடைய ஆகாரத்திற்கேற்ற சோறு, மீன், ஊறுகாய் முதலிய பண்டங்கள் வைக்கப்பட்டிருக்கும். அவர்கள் வெளியே எவ்விடம் போனபோதிலும் போஜனத்திற்கு திண்டாடவேண்டுவதில்லை. பசித்தபோது ஒருமர நிழலிற் போய்த் தொப்பியைக் கழற்றிய மாத்திரத்தில் பசி தீர்ந்துவிடும். அவர்களுக்கு ஒருவகை எரும்புத்துவையல் மிகவும் பிரீதி. அப்பிராணிகளை அவர்கள் ஏராளமாய்ப் பிடித்து மசால் முதலியவை கலந்து அரைத்துத் தின்பார்கள். மீன்களைப்பிடித்து நெடுநாள் வரையில் பரண்களிலடைத்து அழுகவைத்தபின் ஓர்வகைப் புழுக்கள் தோன்றிக் கொழுத்து வளர்வதன்மேல் அப்புழுக்களையும் அழுகிய மீன்களையும் நன்றாய் இடித்து மற்ற பதார்த்தங்களுக்கு மசாலாவாக உபயோகித்துக் கொள்ளுகிறார்கள். அவர்கள் பால், தயிர், வெண்ணெய் ஆகிய இவற்றைப் பிரீதியுடன் உட்கொண்டபோதிலும் நெய் முகத்தில் விழிப்பதேயில்லை. வேப்பிலை கிடைப்பது அத்தேசங்களில் மிகவும் அரிது. ஒரு வேப்பிலைக் கொத்து நாலைந்து அணா வரையில் விலையேறும். வேப்பிலைச் சுமையை யாராவது கடைவீதிகளில் கொண்டுவருவார்களாகில் அதைக் கண்டமாத்திரத்தில் ஜனங்கள் திரள்திரளாகக்கூடி உயர்ந்த விலை கொடுத்து ஒரு நிமிஷத்தில் வாங்கிக்கொண்டு போய் விடுவார்கள். அவர்கள் அதை, கொதிக்கும் ஜலத்தில் நாலைந்து நிமிஷம் தோய்த்து வைத்துப் பின்பு அதனுடன் ஒன்றுங் கலவாமலே மிக்க விருப்புடன் தின்றுவிடுவார்கள். இப்படி பர்மியர் வழக்கத்தைப்பற்றி ஒரு நிருபர் தேசாபிமானி என்னும் பத்திரிகையில் எழுதுகிறார்.

## NEWS OF THE MONTH.

## மாஸ வர்த்தமானங்கள்.

### INDIAN NEWS.

### இந்திய நாட்டு ஸமாசாரங்கள்.

THE INDIAN NATIONAL CONGRESS.

இந்தியன் நாஷனல் காங்கிரேஸ்.—வரும் டிஸம்பர் மாஸம் 26, 27, 28-தேதிகளில் கல்கத்தாவில் நடை பெறும். 29-தேதியில் ஆசார சீர்திருத்த கான்பரென்ஸ் காங்கிரஸ் பந்தலில் நடைபெறும்.

WANDERING MAHOMADAN TRADERS.

ஊநராய்த்திரியும் முகம்மதிய வியாபாரிகள்.—அலைந்து திரியும் வடக்கத்திய முகம்மதியர்களில் சிலர் ஸமயத்தில் மோசடி நாணயத்தையும் தங்கம், வெள்ளி முலாம் பூசின ஸாமான்களையும் நல்லதாக பாவிக்க கொடுப்பதால், அவர்களிடம் தங்கள் ஊரார்கள் யாதொரு வியாபாரமும் வைத்துக்கொள்ளக் கூடாதென்பதை எல்லாரும் அறியவும்.

A BALANCE.

ஒரு தராசு.—பஞ்சாபி கற்பிக்கிறவராகிய அமிரிட்ஸார் ஸிம்பநாதர், சமீபத்தில் ஒரு தராசு உண்டு பண்ணியிருக்கிறார். அத்தராசானது உண்மையான தங்கத்துக்கும் சூது தங்கத்துக்குமுள்ள வித்தியாஸத்தை எடுத்துக் காட்டுகிறதாம். இத்தராசு வெகு புகழ் பெற்றபடியால் க்வாலியர் மகாராஜா இதன் உரிமையை ரூபா 9000-க்கு வாங்கிவிட்டாராம்.

A SCHOLARSHIP.

ஒரு ஸ்காலர்ஷிப்பு.—திருவல்லிக்கேணி ஹிந்து ஹைஸ்கூலில் 5-வது பாரமில் படிக்கும் எந்தப் பிள்ளை கடைசிப்பரிக்ஷையில் ஸம்ஸ்கிருதத்தில் அதிக மார்க்கு வாங்குகிறனே அவனுக்கு ஸ்கர்லர்ஷிப் கொடுக்கும்படியாய் ஆனரபில் மிஸ்டர். வி. கிருஷ்ண ஸாமி அய்யர் ஆயிர ரூபாய் நன்கொடையாக கொடுத்திருக்கிறார். இந்த ஸ்காலர்ஷிப் காலஞ்சென்ற அவர் தமையன் வி. ஸ்வாமிநாத அய்யர் பேரால் கொடுக்கப்படும்.

THE BANK OF BURMA.

பர்மா பாங்கி.—நமது சென்னையில் பீச்சு இரண்டாவது லயனிலுள்ள பர்மா பாங்கி நாளது மீ 14-தேதி மூடப்பட்டது. இதன் தலைபாங்கி ரங்கூனிலிருக்கிறது. அதுவும் சாத்தப்பட்டுப் போயிற்று. கல்கத்தா பம்பாய் இவைகளிலுள்ள இதன் கிளைகளும் அன்றைக்குச் சாத்தப்பட்டுப் போயிற்ரும். சென்னையில் இப்பாங்கியின் கிளையில் இந்தியர்களானவர் சிலரே பணம் போட்டிருந்தார்கள். அதனல் இங்கு அதிகக் குழப்பமில்லை.

WANDERING PHYSICIANS.

ஊநராய் அலையும் வைத்தியர்கள்.—கண், பல், இவைகளின் வியாதியை சொஸ்தம் செய்துவிடுவதாகச்சொல்லிக்கொண்டு இதர தேசங்களிலிருந்து வரும் அன்னியர்களிடம் வைத்தியம் செய்துக்கொள்ளுவதில் வெகு ஜாக்கிரதையோடு இருக்கவேணுமென்பதை தங்கள் ஊர்ஜனங்களுக்கு கிராம முனிசீபுகள் எச்சரித்துவைக்கவேணும். யாருக்கு வைத்தியம் செய்வதாக சொல்லப்படுகிறதோ அவர்களுக்கு இவர்களால் பெரிய அபாயங்கூட உண்டாகிவிடுகிறதென்று தஞ்சாவூர் கலெக்டர் டிஸ்ட்ரிக்டு கெஜட்டில் ஒரு விளம்பரம் செய்திருக்கிறார்.

BANGALORE TRAMWAY.

பங்களூர் டிராம்வே.—இவ்வூரில் காவேரி நீர்வீழ்ச்சியிலிருந்து மின்சாரம் உற்பத்திசெய்து டிராம் போடுவதாக உத்தேசித்திருக்கிறார்கள். மைஸூர் கவர்ன்மெண்டார் இந்தப் பிரேரணையை ஆலோசனை செய்து வருகிறார்கள். இதற்கு 7 லக்ஷ ரூபாய் பிடிக்குமாம். அடுத்த வருஷம் வேலை ஆரம்பித்து ஒரு வருஷ சாவகாசத்தில் முடித்து விடத் தீர்மானித்திருக்கிறார்கள். 10 டிராம் வண்டிகள் இங்கிலாந்திலிருந்து செய்யப்பட்டுவரும். தலைக்கு மேல் கம்பிபோட்டு அதன் வழியாய் மின்சாரப் பவர் கொடுப்பதாய் ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

A FREE READING ROOM IN HOWRAH.

ஹௌராவில் ஒரு இலவச ரீடிங் ரூம்.—இவ்வூரில் ஒரு இலவச ரீடிங்ரூம் ஸ்தாபிக்க வேண்டுமென்று அவ்வூர் கனவான்கள் கூடிப் பிரயத்தனப்பட்டார்கள். அவ்வூர் கலெக்டர் கவர்ன்மெண்டுக்காக 6 கோட்டா நிலம் இலவசமாய் அளிப்பதாய் வாக்களித்

தார். பாபுஜயத்குமார் முகர்ஜி அங்கிலத்தின்மேல் 9000 ரூபாயில் ஒரு கட்டிடம் கட்டித் தருவதாகவும், புஸ்தகாலயத்திற்குப் புஸ்தகங்களும், நாற்காலி மேஜை முதலிய ஸாமான்களும் பிறவும் வாங்கியளிப்பதாகவும் வாக்களித்தார். லெப்டினெண்ட் கவர்னர் இக்கட்டிடத்திற்கு அஸ்திவாரக்கல்லை நாட்டுவதாக வாக்களித்தார். லைப்ரெரி அவர் பேரோலே டியூக் லைப்ரெரி என்று பேரிடப்படும்.

CASTRATED A MAN.

**மனுஷனுக்கு விதையடித்தார்கள்.**—மாடுகளுக்கும் சேவல்களுக்குந்தான் விதை யடித்தலுண்டு. அப்படி விதையடித்து விடுவதால் அவைகள் பெண் சேர்க்கையில் நாட்டமில்லாமலாகிவிட அதனால் அவைகள் பலமும் புஷ்டியும் கொள்ளுகின்றன. ஆனால் கான்கினாரா என்ற இடத்தில் பக்கீரொருவர் விதையடித்துக்கொள்வதில் பிரியம் கொண்டு விட அப்படியே இருவர் கூடி யவனது விதையை அறுத்தெடுத்து விட்டனர். சாயங்காலத்திற்குள் பக்கீர் மரணப் பிராப்தியாகிவிடவும் இருவரும் பிடிக்கப்பட்டு அலிப்பூர் செஷனில் விசாரிக்கப் படுகின்றனர். இந்த மனிதர்கள் விதை யடித்த பலனை தந்திருக்குமானால் அநேக பிரம்மச் சாரிகள் விதையடித்துக்கொண்டு நல்ல பிரயோஜன மடையக் கூடியவர்களா யிருப்பார்களன்றோ?—பாண்டியன்.

THRONES IN THE DURBAR.

**தர்பாரில் சிங்காதனங்கள்.**—நான்கு சிங்காதனங்கள் டெல்லி தர்பார் சுபகாரியத்தின் போது உபயோகமாகும். இந்நான்கும் கல்கத்தாவிலே செய்யப்பட்டன. 1875-ம் வருஷம் மெஸ்ஸர்ஸ் ஹாமில்டன் அண்டு கம்பெனியாரால் செய்யப்பட்ட சிங்காதனத்தைப் போன்றதாம். இவற்றுள் 2 முக்கியமாய் முடிசூட்டின்போது உபயோகப்படுமாகையால், அவைகெட்டி வெள்ளியில் செய்யப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டிற்கும் 80,000 ரூபாய்கள் உருக்கிவிடப் பட்டனவாம். மற்ற 2-ம் வெள்ளி முலாம் பூசியுள்ளவை. அவைகளின்மேல் பல சித்திரவேலைகள் செய்யப்பட்டிருக்கின்றன. இவ்வேலைகள் சக்ரவர்த்தினியின் முடிசூட்டுத் தாவணியிலுள்ள சித்திர வேலைகளைப் போன்றனவாம். ரோஜா, தாமரை, சண்பகம் முதலிய பூவலங்காரமும் காணப்படும்.

THE TANJORE DISTRICT CONFERENCE.

**தஞ்சாவூர் டிஸ்ட்ரிக்டு கான்பரன்ஸ்.**—இக்கான்பரன்ஸ் இந்த மாதம் 18, 19ம் தேதிகளில் நடைபெறுமென்று நாம் முன்னம் குறிப்பிட்டிருந்தபடி நடப்பதில்லையென்று அறிகிறோம். மதுரையில் நடந்துவரும் திருநெல்வேலி கலெக்டெரின் கொலைக் கேஸ் ஸம்பந்தமாய் ஆனரபில் மிஸ்டர் எல். ஏ. கோவிந்தராகவ ஐயர் சென்னையில் தங்கி யிருக்கவேண்டியிருப்பதால் அக்கான்பரன்ஸில் அக்கிராசனம் வகிக்க முடியாதென்று தெரிவித்திருக்கிறார். இது டிஸம்பர் மாசம் இரண்டு மூன்று தேதிகளில் நடக்கும்.

FEEDING FAMISHED COWS.

**பட்டினி கிடக்கும் பசுக்களுக்கு ஆகாரம்.**—சுமார் ஒரு மாதத்திற்கு முன்பு காயனதாஸ் பகவான்தாஸ் என்னும் சந்நியாசியொருவர் பம்பாய்க்கு வந்து தன் தேசத்தில் (கட்ச்புஜ்) பட்டினி கிடக்கும் பசுக்களுக்கு புல் வாங்கிப்போட திரவிய சகாயம் வேண்டுமென்று ஹிந்துக்கள் அனேகரிடம் முறையிட்டுக்கொண்டும் ஒருவரும் உதவி செய்யாததால் மூம்பாதேவி ஆலயத்திற்குள்ளிருந்த வேப்ப மரமொன்றில் 25 அடி உயரத்தில் தலை கீழாக சுமார் 10 நிமிஷம் தொங்கிவிட்டார். அதனைப்பார்த்த சிலர் அவர் கோரிய தொகை 300 ரூபாயையும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டபிறகு அவர் கீழே இறங்கினாராம்.

A MATCH FACTORY IN BURMA.

**பர்மாவில் ஒரு நெருப்புப் பெட்டித் தொழிற்சாலை.**—பர்மாவில் ரங்கூனுக்கு 5 மைல் தூரத்திலுள்ள கானுங்கில் ஒரு நெருப்புப்பெட்டித் தொழிற்சாலை ஏற்பட்டுப் போமென்று ஸமாசார மெட்டுகிறது. அத்தொழிற் சாலை பர்மா சட்டசபை மெம்பராகிய ஆனரெபில் சின்ஸாங்கால் ஸ்தாபிக்கப்படும். இந்தியாவில் சில இடங்களில் அம்மாதிரி தொழிற் சாலைகளை ஸ்தாபித்துக் கொடுத்திருக்கும் மிஸ்டர் இ. வி. இவான்ஸைக்கொண்டு ஆனரெபில் சின்ஸாங்க் அத்தொழிற் சாலையை ஸ்தாபிக்கப் போகிறார். மிஸ்டர். இவான்ஸ் சில தீக்குச்சித்

தொழிற் சாலைகளை இந்தியாவில் ஸ்தாபித்துக்கொடுத்திருப்பதுமன்றி, இந்தியா கவர்ன்மெண்டாருக்கு இன்ன மரங்கள் நெருப்புக் குச்சிகள் செய்வதற்கு ஏற்ற மரங்களாகு மென்று கூட, ரிபோர்ட் செய்திருக்கிறார். அந்தத் தொழிலில் வெகு நாளைய அனுபோகமுள்ள மிஸ்டர் ரௌஸார் என்ற இஞ்சினீர் ஒருவரைக்கூட ஆனரெபில் சின்ஸாங்க் வேலைக்கு அமர்த்திக் கொண்டிருக்கிறாரென்று காண்கிறது.

SANITARY CONFERENCE.

**சுகாதார கான்பெரென்ஸ்.**—நம்தேசத்து சுகாதார நிலைமையில் அக்கரைப்பட்ட நிபுணர்கள் சிலர் பம்பாயின் ஸமீபத்தில் கான்பெரன்ஸ்கூட, அப்போது ஆனரபில் மிஸ்டர் பட்லர் வந்திருந்து, ஆரம்பப் பிரசங்கம் செய்தார். அதில் சுகாதார நிலைமையை எப்படி விர்த்தி செய்வதென்பதையும், என்னென்ன வியாதிகள் இந்தியரைப் பாதிக்கின்றன வென்பதையும், அவைகளைக்குறைக்க இந்தியாக் கவர்ன்மெண்ட் என்ன முயற்சிகள் செய்து வருகிறார்களென்பதையும், அவைகளை இனி கூடிய வரையில் எப்படித் தடுக்கலாமென்பதையும், மாகாணக் கவர்ன்மெண்டுகள் இந்த வழியில் என்ன செய்து வருகிறார்களென்பதையும் பற்றிப்பேசினார். சுகாதார நிலைமையை விர்த்திபண்ணுவது ஜனங்களின் கூட்டுறவால் ஸாத்தியமாகையால், ஆரம்பத்தில் அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் பொருளாதார நிலைமையையும் ஸமூக வாழ்க்கையையும் அறிவது அவசியம். இந்தக் கான்பரென்ஸில் கிராமங்களிலும் பட்டணங்களிலும் சுகாதார முறைகளையும் விசேஷ வியாதிகளைத் தடுப்பதையும்பற்றி கவனிக்கப்படும். இம்மாதிரிக் கான்பெரென்ஸ்கள் வருஷா வருஷம் ஸௌகரியமான இடத்தில் கூட்டப்படும்.

FERRY BOATS.

**ஆறுகளில் படகுகள்.**—திரிச்சினுப்பள்ளி ஜில்லாவில் கொள்ளிடத்தில் படகு செலுத்திப்போகும் சில தோணித் துறைகளில் அபாயங்கள் நேரிட்டு, உயிர்ச் சேதம் பல உண்டானதால், கவர்ன்மெண்டார் தோணிக் கண்ட்ராக்டர்களின் காரியத்தைக் கவனிக்க வேண்டுமென்று தீர்மானித்து உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஜில்லாக் கலெக்டரும், தத்தமது எல்லைக்குள் தோணி செலுத்தும் கண்ட்ராக்டர்களின் வேலையை அடிக்கடி கவனித்து வர வேண்டுமென்று இவ்வுத்தரவில் கண்டிருக்கிறது. தோணிகள் ரிப்பேர் செய்யப்பட்டு ஒழுங்காயிருக்கின்றனவா வென்றும், அவற்றில் அதிகமான ஜனங்கள் ஏற்றப்படாம லிருக்கின்றார்களா வென்றும், தக்க ஆட்களைக் கொண்டு அத்தோணிகள் தள்ளப்பட்டு வருகின்றனவா வென்றும் கவனிக்கவேண்டியது கலெக்டர்களின் பொறுப்பாகும். கண்ட்ராக்டர்களின் அஜாக்கிரதையினால் உயிர்ச் சேதம் உண்டாயிற்றென்று தெரிகிற பக்ஷத்தில் அவர்கள் பிராஸிகூஷனுக் குள்ளாவார்களென்றும் இவ்வுத்தரவு கூறுகிறது. ரெவினியூ போர்டார் ஒவ்வொரு ஜில்லாக் கலெக்டரும் அப்போதப்போது தோணிகளைப் பரீக்ஷை செய்ய வேண்டுமென்று அபிப்பிராயப் பட்டதை கவர்ன்மெண்டார் அங்கீகரித்து விட்டார்கள்.

ELECTION OF TALUK BOARD PRESIDENTS.

**தாலூகா போர்ட் ப்ரஸிடெண்டுகளின் எலெக்ஷன்.**—தாலூகா போர்ட் ப்ரஸிடெண்டை மெம்பர்கள் எலெக்ஷன்செய்யும்விஷயமாய் கவர்ன்மெண்ட் ஒழுங்குகள் செய்து ப்ரசுரித்திருக்கிறார்கள். முன்னதாக 20 நாள் இருக்கையில் எலெக்ஷன் செய்யுந் தினத்தைக் குறிப்பிட்டு டிஸ்டிரிக்ட் போர்ட் ப்ரஸிடெண்ட் டிவிஷனல் ஆபீஸருக்கெழுதி அவர் 10 நாள் முன்னதாக மெம்பர்களைக் கூட்டவேண்டும். அப்படிக் கூட்டும் ஸமயத்தில் மாத்த மெம்பர்களில் பாதிப்பேரும் டிவிஷனல் ஆபீஸரும் வந்திருக்கவேண்டும். பிறகு எலெக்ஷன் ஸாதாரண ஒழுங்குகளின்படி செய்யப்பட்டு டிவிஷனல் ஆபீஸர் எலெக்ஷனானவர் இன்னாரென்று அப்போதே சொல்லி தாமஸமில்லாமல் ப்ரஸிடெண்டுக்கும் எழுதியனுப்பவேண்டும். யாருக்காவது எலெக்ஷனில் ஆட்சேபமுண்டானால் மூன்று மெம்பர்கள் சேர்ந்து ஏழு நாளுக்குள் ப்ரஸிடெண்டுக்கு எழுதிக் கொள்ளவேண்டும். ப்ரஸிடெண்டின் உத்தரவுக்கு மேல் அப்பீல் இல்லை. எலெக்ஷனுக்குக் குறித்த தேதியில் எலெக்ஷன் நடக்காமற்போனால் வேறு எலெக்ஷன் நடக்கும்படி ப்ரஸிடெண்ட் உத்தரவு பண்ணலாம். அப்போதும் எலெக்ஷன் நடக்கா

மற்போனால், கவர்ன்மெண்டுக்கு அறிவிக்க, கவர்ன்மெண்ட் செய்யும் உத்தரவு முடிவான உத்தரவாகும். இப்படி எலெக்ஷன் விஷயமாய் கவர்ன்மெண்ட் செய்திருக்கும் உத்தரவு இந்த வருஷம் டிசம்பர் மாசம் முதல் தேதி முதல் அனுஷ்டானத்துக்கு வரும்.

DURBAR CELEBRATIONS IN MADRAS.

**சென்னையில் தர்பார்க் கொண்டாட்டம்.**—சென்னையில் டிஸம்பர் மாசம் 12-ந்தேதி தர்பார் கொண்டாட்டத்துக்கு வேண்டிய ப்ரோகிராம் பிரசுரமாயிருக்கிறது. பல இடங்களில் ஏழைகளுக்குச் சாப்பாடு போடப்படும். இதைப் பல பெரிய மனுஷர் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஏழைகளுக்குக் காலை 9-மணி முதல் 11-மனி வரையில் துணிகள் கொடுக்கப்பட்டு சாப்பாடும் போடப்படும். கவர்ன்மெண்ட் விருந்து மண்டபத்தின் படிகளிலிருந்து ராஜ விளம்பரம் பகல் 12-மணிக்கு படிக்கப்படும். அப்போது காலேஜ் சிறுவர்கள் 3000-பேர் அங்கு கூட்டப்பட்டிருப்பார்கள். சிலர் ஸம்ஸ்கிருதத்திலும் தேசபாஷைகளிலும் தேசகீதம் பாடுவார்கள். காலேஜ் சிறுவர்களுக்கு சக்ரவர்த்தி தம்பதிகளுடைய படம் அமைத்த பதக்கங்கள் கொடுக்கப்படும். பீபில்ஸ் பார்க்கில் கீழ்த்தரப் பள்ளிக்கூடங்களிலும் ஹைஸ்கூல்களிலுமுள்ள 10,000 பிள்ளைகள் வரையில் கூட்டப்பட்டு, சிற்றுண்டிகள் பெறுவார்கள். பீபில்ஸ்பார்க்குக்குப்போகக்கூடாத குழந்தைகள் சென்னையில்பற்பல இடங்களில் கூட்டப்பட்டுச் சிற்றுண்டிகள் பெறுவார்கள். பழைய ஹைகோர்ட்டிலிருந்து மவுண்ட்ரோட்மைதானம்வரையில் ஒரு ஊர்வலம் தயார்செய்யப்படும். மைதானத்தில் நடக்கும் வேடிக்கைக்கு வெஸ்ட் அண்ட் கம்பெனியிலிருந்து ஒரு ரூபாய்க்கும் அரை ரூபாய்க்கும் டிக்கெட்கள் பெறலாம். பட்டணத்திலுள்ள கோவில்களிலும் மசூதிகளிலும் தீபாலங்காரங்களும் ஆராதனைகளும் செய்யும்படியாக டிரஸ்டிசள் ஏற்பாடுகள் செய்வார்கள். தேசகீதங்கள் ஸம்ஸ்கிருதத்திலும் தேசபாஷைகளிலும் துண்டுப் பத்திரிகைகளில் அச்சிடப்பட்டு லக்ஷக்கணக்காய் ஸ்கூல் பிள்ளைகளுக்குக் கொடுக்கப்படும். பட்டணத்து ஜனங்கள் தங்கள் வீடுகளையும் மற்ற இடங்களையும் தீபாலங்காரங்கள் செய்யும்படியாகவும் அன்று தினத்தை ஒரு திருவிழாப்போல் கொண்டாடும்படியாகவும் துண்டுப்பத்திரிகைகள் அச்சிடப்பட்டு எல்லோருக்கும் கொடுக்கப்படும்.

THE DURBAR PROGRAMME.

**தர்பார் ப்ரோக்ராம்.**—டிஸம்பர் மாதம் 7-ந்தேதி வியாழக்கிழமை பகல் 10-மணிக்கு ராஜ ப்ரவேசம்; 3-மணி முதல் 5-மணிவரையில் அரசர்களை வரவேற்றல்.

8-ந்தேதி வெள்ளிக்கிழமை பகல் 11-30-மணி முதல் 1-30-மணி வரையில் மன்னர்களை வரவேற்றல். 3-40-மணிக்குக் காலஞ் சென்ற எட்வர்ட் சக்ரவர்த்தியின் ஞாபகார்த்தச் சடங்குகள். இரவு 8-மணிக்கு ராஜ தம்பதிகளுக்கு விருந்து.

9-ந்தேதி சனிக்கிழமை தேச மன்னர்களை பகல் 11-30-மணி முதல் 1-30-வரையிலும் வரவேற்றல். போலோ விளையாட்டும், புட்பாலும் 3-30-மணிக்கு நடை பெறும்.

10-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை பகல் 10-30-மணிக்கு மிலிடேரி காம்பில் சர்ச்சு சர்விஸ் அதாவது தெய்வத்தைத் தொழுதல் நடை பெறும்.

11-ந்தேதி திங்கட்கிழமை பகல் 11-மணிக்குப் போலோ கிரவுண்டில் பல நிறமுள்ள கொடிகள் கொடுக்கப்படும். போலோ முடிவு ஆட்டம் 3-30-மணிக்குத் தொடங்கும்.

12-ந்தேதி செவ்வாய்க் கிழமை பகல் 12-மணிக்கு தர்பார் நடை பெறும். ராஜ விருந்தும், வரவேற்பும் இரவு 8-மணிக்கு நடை பெறும்.

13-ந்தேதி புதன்கிழமை பகல் 10-45-மணிக்கு ராஜ சக்கரவர்த்தியவர்களின் காம்பில் வாலண்டியர் ஆபீஸர்களையும் இந்திய ஆபீஸர்களையும் வரவேற்றல். 3-30-மணிக்கு ராஜத் தோட்டக் கச்சேரியும் ஜனங்களுக்கு விருந்தும் நடை பெறும். இரவு 8-மணிக்கு ராஜ தம்பதிகளுக்கு விருந்து நடைபெறும்.

14-ந்தேதி வியாழக்கிழமை பகல் 10-30-மணிக்கு ரிவ்யூவும், பிற்பகல் 3-30-மணிக்கு ஹாக்கி விளையாட்டும், இரவு 9-30-மணிக்குப் பட்டமளிக்கும் காரியங்களும் நடை பெறும்.

15-ந்தேதி வெள்ளிக்கிழமை பகல் 11-மணிக்குப் போலோ கிரவுண்டில் போலீஸ் படைகளைப் பார்வையிடல், 3-மணிக்கு மிலிடெரி விளையாட்டுக்கள் பலநடை பெறும். இரவு 9-மணிக்கு மேல் யுத்தம் அல்லது குஸ்தி நடை பெறும்.

16-ந்தேதி சனிக்கிழமை பகல் 1-மணிக்கு ராஜா சக்ரவர்த்தியும் பரிவாரங்களும் புறப்படுதல்.

## FOREIGN NEWS.

## அந்நியநாட்டு ஸமாசாரங்கள்.

FALSE TEETH.

**பொய்ப்பல்.**—வருஷாவருஷம் அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்துக்கு 2 கோடி பொய்ப்பற்கள் அனுப்பப்படுகின்றன.

THE EMPEROR'S EXPENSES.

**சக்ரவர்த்தியின் செலவு.**—நமது சக்ரவர்த்தி டெல்லி தர்பாருக்கு வருவது பற்றி பிரத்தியேகமாக இவருக்கு 120,000 பவுன் கொடுக்கும்படி பார்லிமெண்டில் உத்தரவாயிருக்கிறது.

INDIAN STUDENTS IN ENGLAND.

**இங்கிலாந்தில் வாசிக்கும் இந்தியமாணவர்கள்.**—இங்கிலாந்திலிப்போது 128-இந்தியமாணவர்கள் வாசிக்கின்றார்கள். இவர்களுள், இந்துக்கள் 72, மகமதியர்கள் 23, சீக் ஜாதியார் 33.

A WONDERFUL HOUSE.

**ஒரு அற்புத வீடு.**—அமெரிக்கா ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த நீயுயார்க் பட்டணத்தில் 750 அடி உயரமுள்ள வீடொன்றிருக்கின்றது. அதில் 40-அடுக்கு மெத்தைகளிருக்கின்றன. இன்னும் 25-மெத்தைகள் அவ்வீட்டின் மேல்சட்ட உத்தேசித்துக் கட்டி வருகிறார்கள்.

A WONDERFUL STATUE.

**அற்புதப்பதுமை.**—ஜப்பான் தேசத்து டோக்யோ நகரிலுள்ள ஹானன் உமாமாஸசிச்சி யென்னும் ஒருவர், தம்மைப் போன்றொரு பதுமை செய்திருக்கிறார். அப்பதுமையின் பக்கத்தில் அவரிருந்து சேஷ்டை செய்யாதிருந்தால், இன்னது பதுமை, இன்னான் மனிதன் என்றறிதல் முடியாத விதமாயிருக்கிறதாம்.

PENSIONERS IN THE UNITED KINGDOM.

**பென்ஷன் பெற்றவர்கள்.**—1911-வருஷம் மார்ச்சுமீ கடைசி வெள்ளிக்கிழமை வரையில் ஐக்கிய நாட்டில் அதாவது இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, ஐயர்லாந்து ஆகிய இந்த மூன்று நாடுகளிலும் 3,33,05C-புருஷர்களும், 574, 411, ஸ்திரீகளும் பென்ஷன் பெற்றிருக்கிறார்களாம்.

DEATH SENTENCE IN CHINA.

**சீனதேசத்து மாணதண்டனையின் வழக்கம்.**—சீனுவில் மாணதண்டனை விதிக்கப் பட்டவர்களைப் பலகையின்மீது படுக்கவைத்துக் கண்டங்கண்டமாக வெட்டுவது வழக்கமாம். இப்போது நான்கு கண்டங்களாக வெட்டவென்று உத்தரவாயிருக்கின்றதாம்.

மாண தண்டனையே விதிக்கப்படாதென்னும் கட்சியொருவாறிருக்க, நாகரீகம் பெற்றுள்ள இக்காலத்தில் கொரோமாக மாண தண்டனையை நிறைவேற்றுவது அறியாமையேயன்றோ!

RAINLESS REGION.

**மழை பெய்யாத இடம்.**—தென் அமெரிக்காவைச் சேர்ந்த பீரு என்னும் பாகத்தில், 100 சதுர மைல் அளவுள்ள ஓர் இடமிருக்கிறது. இதில் நூற்றாண்டுக் கணக்காய் மழைகிடையாது என்றாலும், சில பாகங்கள் செழிப்பாயிருக்கின்றன. இதற்குக் காரணம் அங்கேபெய்யும் பனியேயாம்.

A LADY WITH TEETH SET WITH DIAMOND.

**வைரமிழைத்த பல்லுடையவள்.**—அமெரிக்காவிலுள்ள நியுயார்க் பட்டணத்தில் மிஸ் பிளாரென்ஸ் வார்ட் என்பவள் மூக்கால் காரெட் நிறையுள்ள வைரக்கல்லொன்றை தனது முன்னம் பல்லிலிழைத்திருக்கின்றாள், அவள் வாய்த் திறக்கும் போதெல்லாம் அது வெட்டிப் பிரகாசிக்கிறதாம்.

LEATHERED STREET.

**தோற்தெரு.**—பெர் மிங்கம் நகரிலே பதனிடப் படுந்தோலிலிருந்து கழிக்கப்படுந்தோல்களைத் தாரெண்ணெயோடு சேர்த்துத் தெருப்போடுகிறார்கள். இத்தெரு சவாரிக்குதிரைகளுக்கு மிதமிஞ்சிய விரைவையுஞ் சொகுசையுங் கொடுக்கிறதாம். போடப்பட்டு 12 மாஸங்களாகியும் அதில் யாதொரு பழுதுங்காணப்படவில்லையாம்.

HOT WATER SUPPLY.

**வென்னீர் சப்ளை.**—லண்டன் வீடுகளில் வென்னீர் காய்ச்சாமல் குழாய்களின் வழியாக மின்ஸார மூலமாய் ஜலம் வீடுகள் தோறும் ஸப்ளை செய்ய ஏற்பாடு செய்து வருகிறார்களாம். 30 வருஷங்களாக உஷ்ண ஜலத்தில் ஸ்நானம்செய்வது அநேக வியாதிகளுக்கும் பரிகாரமென்று ஜனங்கள் வென்னீரையே உபயோகிக்கிறார்களாம். வென்னீர் ஸப்ளையினால் அநேக பதார்த்தங்களும் சமைக்க உதவும். வீடுகளின் புகையும் ஒழியும்.

## MADRAS MARKET REPORTS.

## மதராஸ் மார்க்கெட் நிலைவரங்கள்.

தென்னிந்தியா சேம்பர் ஆப் காமர்ஸ் என்று சொல்லப்படும் வர்த்தக சங்கத்தாரின் நவம்பர் மாஸம் 22உ ரிப்போர்ட்டுப்படி.

PRODUCE MARKET.—விளைபொருள்கள்.

| | ரூ. அ. பை |
|---|---|
| ஆவாரம்பட்டை பாரம் 1-க்கு | 15 முதல் 22 |
| கொன்னைப்பட்டை ஷை | 11 முதல் 12 |
| கடப்பை கடுக்காய் ஷை | 8 முதல் 9 |
| சேலம் அரசகிரிஷ்டி ஷை | 17 முதல் 18 |
| நல்லெண்ணெய் ஷை | 105 முதல் 110 |
| புங்கம் எண்ணெய் ஷை | 65 முதல் 92 |
| எட்டிக்கொட்டை ஷை | 17 |
| விளக்கெண்ணெய் ஷை | 72 |
| கொட்டை முத்து .. | 10 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பந்தர் பச்சை அரிசி 44 படி | 8 | 8 | 0 |
| நெல்லூர் அரிசி 31 படி .. | 6 | 10 | 0 |
| கோதுமை 4 படி .. | 1 | 0 | 0 |
| கொள்ளு 195 ராத்தல் | 5 | 14 | 0 |
| வெங்காயம் (தாட்பத்திரி) பாரம் .. | 12 | 0 | 0 |
| ஷை (பல்லாரி) ஷை .. | 11 | 8 | 0 |
| பங்களூர் உருளைக்கிழங்கு | 25 | 0 | 0 |

METALS—உலோகங்கள்.

| | ரூ. |
|---|---|
| பித்தளைத்தகடுகள் 'Rex' ம் இங்கிலீஷ—ம் ராத்தல் 20-60, 30-60, 20-40, 20-50, பாரம் .. | 200 |
| செப்புத் தகடுகள் பாரம் .. | 242 முதல் 243 |
| செப்புக்கட்டி ஷை .. | 217 |
| நாகம் ஷை | $83\frac{1}{2}$ |
| ஷை (உள்ளூர்) ஷை .. | 80 |
| ஈயம் ஷை .. | 58 |
| காரீயம் ஷை .. | 64 |
| வெள்ளீயம் ஷை .. | 193 வராகன். |

IRON—இரும்பு.

| | | |
|---|---|---|
| மருக்கி சட்டம் 2 செ. பாரம் ரூ. | | $20\frac{1}{2}$ |
| சீமை .. .. .. | | 40 |
| மருக்கி தகடு | 6—9, 12—13, | 24—37 |
| பீப்பாய்க் கட்டு .. .. | | 27—28 |
| 8 பட்டை எஃகு .. .. | | 22 |
| எஃகு வில்கட்டு .. .. | | 27—31 |
| திரணைக் கம்பி மருக்கி 2 செ. .. | | 22—35 |
| சீமை .. .. .. | | 40-46-49 |

## SEASON.

## காலஸ்திதி.

RAINFALL.

மழை.—1911௵ ஏப்ரல் ௴ 1-உயிலிருந்து டிஸம்பர் 1உம் வரையில் பெய்த மழையின் அளவும், இந்தக் காலத்தில் ஸராஸரி பெய்திருக்க வேண்டிய மழையின் அளவும், கீழே அங்குலம், ஸெண்டுகளாக குறிக்கப்பட்டிருக்கின்றன.

| மழை பெய்த ஊரின் பெயர். | பெய்த மழை அங்குலம். | பெய்திருக்க வேண்டிய மழை அங்குலம். |
|---|---|---|
| கோபால்பூர் | 33·88 | 45·53 |
| வால்டேர் | 21·13 | 41·09 |
| காக்கிநடா | 30·31 | 38·09 |
| மசூலிப்பட்டணம் | 35·26 | 39·71 |
| நெல்லூர் | 33·77 | 28·36 |
| மதராஸ் | 30·16 | 43·72 |
| கூடலூர் | 34·74 | 42·58 |
| நாகப்பட்டணம் | 35·81 | 40·30 |
| பாம்பன் | 17·59 | 25·88 |
| கொழும்பு | 55·06 | 72·87 |
| திருவநந்தபுரம் | 54·99 | 57·47 |
| கொச்சி | 106·36 | 109·71 |
| கள்ளிக்கோட்டை | 98·94 | 113·22 |
| மங்களூர் | 100·35 | 123·34 |
| மெர்க்காரா | 138·20 | 123·46 |
| ஐதராபாத் | 20·86 | 30·70 |
| ரெய்ச்சூர் | 18·93 | 30·06 |
| பல்லாரி | 12·79 | 19·37 |
| கர்நூல் | 17·71 | 27·48 |
| கடப்பை | 22·92 | 31·29 |
| ஹாஸ்ஸான் | 32·43 | 34·38 |
| பெங்களூர் | 28·42 | 33·87 |
| கொடைக்கானல் | 56·97 | 47·94 |
| உதகமண்டலம் | 57·85 | .. |
| கோயம்புத்தூர் | 22·29 | 18·59 |
| வேலூர் | 28·68 | .. |
| சேலம் | 24·03 | 37·97 |
| திருச்சிநைப்பள்ளி | 28·75 | 28·31 |
| புதுக்கோட்டை | 29·18 | .. |
| மதுரை | 23·83 | 30·21 |
| திருநெல்வேலி | 18·14 | 21·35 |